சென்னை

பாரகன் & பிராட்வே



# உபாதை மிகுதியான நாட்கள்.....



தலைவலி, சோர்வு, நரம்புப் புடைப்பு ஆகியவை தொடர்ந்துவரும் நாட்களில் உடனே இவைகளினின்றும் விடுதலை யளிக்கும் இரண்டு "அனஸின்" மாத்திரைகளை மறந்து விடாதீர்கள். "அனஸின்" உட்கொண்ட வுடனேயே கரைந்து அதிலுள்ள மருந்து சத்துக்கள் உங்களது உடல் பூராவும் பரவி நரம்புப் பிடிப்பு, வேதனை, அறவருப்பு இவைகளை யகற்றி சுகமான உணர்ச்சியை அளிக்கின்றது. பெனஸிடின், காப்பெய்ன் கொய்னா, அஸிடில் ஸலிஸிலிக் திராவகம் ஆகிய ரசாயனச் சேர்க்கைகளின் சாஸ்திரீயத் தயாரிப்பாலேயே தான் "அனஸின்" ஓர் அற்புத ஔஷதியாகத் திகழ்கின்றது. அவசிய மேற்படும் சமயம் "அனஸின்" மாத்திரைகளை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். இந்த அபூர்வ மாத்திரைகளுக்கு முன் எவ்வித வலியும் நீடித்து நிற்காது.

வலியினின்றும் விடுதலை யளிக்க "அனஸின்" ஒருபோதும் தவறியது இல்லை.

மாத்திரைகள் 14 கொண்ட குழாய்களிலும், 50 கொண்ட புட்டிகளிலும். முதல் சிகிச்சைக்கு வேண்டிய 2 கொண்ட பொட்டலங்களிலும் எங்கும் கிடைக்கும்

## உறுதியுடன் பயமின்றி உட்கொள்ளுங்கள்

**ANACIN**

TRADE MARK REGISTERED

**TABLETS**

**அனஸின்**




இந்தியாவில் தயாரிப்பாளர்கள்: ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய், கல்கத்தா, சென்னை, டெல்லி
தயாரிக்க உரிமை அளித்தவர்கள்: ஒயிட்ஹால் பார்மகல் கம்பெனி, நியூ யார்க், யு. எஸ். ஏ.



எல்லா வயல்களிலும்
தரிசு நிலங்களிலும்
பயிரிடுங்கள்.

**உணவு**
**உற்பத்தியைப் பெருக்குக**

AC.133TM

## ஹெர்குலஸ் என்ற பெயர் வந்த கதை





ஹெர்குலஸ் என்றாலே 'வலு' என்று பொருள். கிரீஸ் தேசத்தில் பழங்கால வீரர்களில் ஹெர்குலஸ் தான் மிகவும் பலவான். இன்னும் அந்தப் பெயர் தான் இணையிலா உறுதியைக் குறிக்கிறது. இந்த பெயர் கொண்ட ஹெர்குலஸ் சைகிள் உலகிலேயே உறுதியானது என்று ஸ்தாபிதமாகிவிட்டது.

# Hercules

எல்லா பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்

## ஹெர்குலஸ்



**இன்றைய சைகிள்களில் மிகவும் சிறந்தது**

THE HERCULES CYCLE & MOTOR CO. LTD., BIRMINGHAM, ENGLAND

EAS/12/31/1

# இந்த ஸ்பெஷல் விற்பனை ஒரே மாதம்தான்

ஜூலை மாதம் 7-ம் தேதி வரையில் கீழ்க்காணும் ஸ்விஸ் கடியாரங்களை நாங்கள் வழங்கும் விலையில் கீழ்க்கண்ட இனாம் சாமான்களுடன் கொடுக்க நிச்சயித்துள்ளோம்.

1. ஒரே தடவையில் ஒரு கடியாரத்திற்கு ஆர்டருடன் ஒரு அமெரிக்கன் ஊற்றுப் பேனாவும்
2. இரண்டு கடியாரங்களுக்கு ஆர்டர் கொடுத்தால் ஒரு பாக்கெட் கடியாரமும்




3. மூன்று கடியாரங்களுக்கு ஆர்டர் கொடுத்தால் ஒரு மேஜை கடியாரமும் அளிக்கப்படும்
4. ஆர்டருடன் ஒரு ரூபாய் மணியார்டர் மூலமோ போஸ்டல் ஆர்டர் மூலமோ அட்வான்ஸ் கொடுத்தால் ஒரு நிக்கு பென்சிலும் கூட அனுப்பப்படும்.



15, 17 ஜுவல் உள்ள வாச்சுகள் 5 வருஷமும், மீதி உள்ளவை 3 வருஷமும் உத்திரவாதம் உள்ளவை. கடியாரங்கள் அனுப்புவதற்கு முன்னும், எண்ணெ போட்டு நன்கு பரிசோதிக்கப்பட்டு அனுப்பப்படும். உத்திரவாத பத்திரம், வெல்வெட் பெட்டி, ஒரு அழகிய பட்டை இனாமாக அனுப்பப்படும். கடியாரங்கள் வி.பி. மூலம் அனுப்பப்படும். பாக்கிங், போஸ்டேஜ். விற்பனை வரி இலவசம்.

ரூ. 50 மேற்பட்ட இலங்கை ஆர்டர்கள் ரூ. 50 க்கு மேற்பட்ட தொகையை பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் மூலம் ஆர்டருடன் அனுப்பவும்.



### ரவுண்டு (சைஸ் 10½)

| | | |
|---|---|---|
| 805 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | ரூ. 31 |
| 806 | ரோ. கோ. கேஸ் 7 ஜுவல் | 36 |
| 926 | க்ரோம் கேஸ் உயர்ந்த 7 ஜுவல் | 35 |
| 927 | ரோ. கோ. கேஸ் உயர்ந்த 7 ஜுவல் | 40 |
| 859 | க்ரோம் கேஸ் 15 ஜுவல் | 40 |
| 860 | ரோ. கோ. 15 ஜுவல் | 50 |



### ரவுண்டு (சைஸ் 10½) சென்டர் செகண்டு

| | | |
|---|---|---|
| 807 | க்ரோம் கேஸ் ரஸ்கோப் ஓட்டம் | ரூ. 25 |
| 808 | ரோ. கோ. ரஸ்கோப் ஓட்டம் | 28 |
| 809 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | 36 |
| 810 | ரோ. கோ. கேஸ் 7 ஜுவல் | 41 |
| 845 | க்ரோம் வாடர் ப்ரூப் 7 ஜுவல் | 49 |
| 862 | க்ரோம் கேஸ் 15 ஜுவல் | 45 |



### சிறிய ரவுண்டு (சைஸ் 8¾)

| | | |
|---|---|---|
| 813 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. 27 |
| 814 | ரோ. கோ. கேஸ் 5 ஜுவல் | 32 |
| 815 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | 32 |
| 816 | ரோ. கோ. கேஸ் 7 ஜுவல் | 37 |



### சிறிய ரவுண்டு (சைஸ் 8¾) சென்டர் செகண்டு

| | | |
|---|---|---|
| 817 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. 31 |
| 818 | ரோ. கோ. கேஸ் 5 ஜுவல் | 36 |
| 819 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | 35 |
| 820 | ரோ. கோ. கேஸ் 7 ஜுவல் | 40 |



### கர்வெக்ஸ் (சைஸ் 7¾)★

| | | |
|---|---|---|
| 821 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. 36 |
| 822 | ரோ. கோ. கேஸ் 5 ஜுவல் | 41 |
| 823 | முழு ரோ. கோ. கேஸ் 5 ஜுவல் | 44 |
| 830 | க்ரோம் கேஸ் 7 ஜுவல் | 42 |
| 831 | ரோ. கோ. 7 ஜுவல் | 47 |
| 832 | முழு ரோ. கோ. 7 ஜுவல் | 50 |

### லேடீஸ் (சைஸ் 5¼)

| | | |
|---|---|---|
| 849 | க்ரோம் கேஸ் அழகிய டிசைன் 5 ஜுவல் | 40 |
| 850 | ரோ. கோ. .. 5 ஜுவல் | 45 |
| 851 | க்ரோம் கேஸ் .. 7 ஜுவல் | 45 |
| 852 | ரோ. கோ. .. 7 ஜுவல் | 50 |
| 857 | ரவுண்டு க்ரோம் கேஸ் 7 ஜுவல் | 46 |
| 858 | ரவுண்டு ரோ. கோ. கேஸ் 7 ஜுவல் | 51 |

★ இதே விலையில் டன்னோ வடிவத்திலும் நீண்ட சதுர வடிவத்திலும் கடியாரங்கள் கிடைக்கும்

### சதுரம் (சைஸ் 8¼)

| | | |
|---|---|---|
| 836 | க்ரோம் கேஸ் 5 ஜுவல் | ரூ. 30 |
| 838 | முழு ரோ. கோ. 5 ஜுவல் | 38 |

### சதுரம் (சைஸ் 8¾)

| | | |
|---|---|---|
| 837 | ரோ. கோ. 5 ஜுவல் | ரூ. 35 |
| 883 | க்ரோம் கேஸ் 15 ஜுவல் | 48 |

**CAROLINE AGENCIES (India) Sec. A/2, P. B. 6764, BOMBAY - 22.**

1875

ஸ்ரீ கடாவ் மில்ஸ்

# 75

வருஷங்களாக

ஒரே அதிகாரத்

தின் கீழ்

1950

கடாவ்

அழகு குணம் வாய்ந்த

வாயில்





75 வருஷ உழைப்பின் ஒரு சின்னம்.

ஸ்ரீ கடாவ் மில்ஸ், பைகுலா, பம்பாய் 27. ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்டு பியர், பம்பாய். ஜவுளிக்கடை: முல்ஜி ஜேதா மார்க்கெட், கோவிந்த் சௌக், பம்பாய் 2.

# "எச்.எம்.வி"

## ஜுன் மாதத்திய புதிய வெளியீடுகள்!



மதுரகீதவாணி

**ஸ்ரீமதி என்.ஸி.வஸந்தகோகிலம்**

(தேசீயப் பாட்டுகள்)

**N.28176**

பாரத தேசம்
வாழ்க நிரந்தரம்

(ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி இயற்றியவை)



**ஸ்ரீமதி வி.ஆர்.தனம்**

**N.28173**

வீர சுதந்திர பாரதம்
வாழ்வை கலையாக்கவேண்டும்

(ஸ்ரீ சுத்தானந்த பாரதி இயற்றியவை)



**ஸ்ரீ என்.எஸ்.சுப்பய்யா**
&
**ஸ்ரீமதி ஜி.ராஜாமணி**

(காமிக்)

**N.28174**

சரஸ்வதி கடாக்ஷம்
2 பாகங்கள்






## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி, லிமிடெட்

கல்கத்தா - பம்பாய் - மதராஸ் - டில்லி




இதற்குமுன் கிடைத்ததில்லை

# இவ்வளவு அதிக பலன்

## இந்த குறைந்த கிரயத்தில்

இந்த சோப்பினுல் சுக க்ஷவரத்தை தினந்தோறும் பல மாதங்கள் வரையில் பெறலாம். எந்த சோப்புடனும் ஒப்பிடு வதை இது ஆக்ஷேபிக்கிறது. மிக்க சுத்த மானதும், இதமளிக்கக்கூடிய தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப் பட்ட இந்த சோப் நீடித்து நிற்கும் க்ரீம் நுரையை தெளிவான பரிமள வாசனையுள்ளது—வெளியிடுகிறது. நீங்கள் க்ஷவரம் செய்துகொள்ள கோத்ரெஜ் சோப்பை உபயோகித்து திருப்தி யடையுங்கள். தாவர எண்ணெய் சோப் புகளை முதல் முதலில் தயாரித்தவர்கள் கோத்ரெஜ் கம்பெனிக்காரர்கள்.

## துரிதமானதும், வழவழவென்ற க்ஷவரங்களுக்கு





மற்ற கோத்ரெஜ் பொருள்கள்: டாய்லெட் சோப்புகள் - க்ளிஸரின் ஹேர் ஆயில்.

100 சத விகிதம் பரிசுத்தத் திற்கு உத்தரவாதம். மிருகக் கொழுப்பு இல்லாதது

இந்தியாவிலும் அயல் நாடுகளிலும் கணக்கற்ற ஆண்களால் பெரிதும் விரும்பப்படும் இந்த "ரவுண்டுகள்" லக்ஷக்கணக்கான வாடிக்கைக்காரர் களின் நன்மதிப்பை உறுதிப்படுத்து கின்றன.

ஒரு டஜன் ரூ. 3



நாயுடுகாரு செட்டியார் வீட்டுக்குக் கல்யாணத்திற்குச் சென்றார். கையில் ஒரு பெரிய 'பிரஸன்ட்' கொண்டு வந்திருப்பதைப்



பார்த்து செட்டியார் அவர்களுக்கு உபசாரம் பலமாகச் செய்து.............




தேங்காய்ப் பொட்டணங்களும் கொடுத்தார். அவர் கொண்டு வந்த பெட்டி 'பிரஸன்ட்'




இல்லை, தேங்காய்களைக் கொண்டு போக ஏற்பாடாக வந்திருக்கிறார் என்பது தெரிந்த



செட்டியார் திகைத்துவிட்டார். எப்படி நாயுடுகாருவின் யோசனை?

# கல்கி

பொருளடக்கம்

*


மலர் 9 இதழ் 47 | ஜூன் 25 | விக்ருதி ஆனி 11

# நிகழ்ச்சிச் சித்திரம்

- சாஸ்திரி












தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற



தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 9 கல்கி இதழ் 47

# என்ன சேதி?

## சூடான பதில்!

சென்னையிலே சில நாட்களுக்கு முன் சில ஹரிஜனப் பிரமுகர்கள் கூடித் தங்கள் சமூகத்தின் முன்னேற்றத்துக்காகக் காங்கிரஸ் மகா சபை எதுவுமே செய்யவில்லை என்று சாதித்திருந்தார்கள் அல்லவா? அவர்களின் விஷமத்தனமான, பொறுப்பற்ற கூற்றுக்குத் திருநெல்வேலியில் சென்ற வாரம் நடந்த சென்னை மாகாண ஹரிஜனங்களின் மூன்றாவது மகாநாடு சுடச்சுடச் சரியான பதில் கொடுத்து விட்டது. திருநெல்வேலி மகாநாட்டில் ஏராளமான ஹரிஜனத் தலைவர்களும் பிரமுகர்களும் கலந்து கொண்டதே ஆதாரமற்ற போலிப் புகார்களுக்கு உற்ற பதில் ஆகும்.

மேற்படி மகாநாட்டுக்கு ஹரிஜனங்களின் உண்மையான தலைவரும் சென்னை சர்க்காரில் மந்திரி பதவி வகித்தவருமான ஸ்ரீ வி. ஐ. முனிசாமி பிள்ளை தலைமை வகித்தார். சென்னை சர்க்காரில் தற்போது ஹரிஜன உத்தாரண மந்திரியாக இருந்து வரும் கனம் பி. பரமேசுவரன் மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். இந்தியா பார்லிமெண்டிலும் சட்ட சபைகளிலும் அங்கம் வகிக்கும் பல ஹரிஜனப் பிரமுகர்கள் மகாநாட்டில் தீவிரமாகக் கலந்து கொண்டார்கள். சென்னை மகாநாட்டில் பேசியவர்கள், ஹரிஜனங்களுக்காக எத்தனையோ வருஷங்களாகச் சீரிய தொண்டு புரிந்து வரும் காங்கிரஸிடம் நன்றி கெட்டதனமாக நடந்து கொண்டதற்குப் பிராயச்சித்தமாய்ப் பாபு ராஜேந்திர பிரசாத், பண்டித ஜவாஹர்லால் நேரு, ராஜாஜி, ஸ்ரீ ஜகஜ் ஜீவன்ராம் முதலியோரின் படங்கள் திருநெல்வேலி மகாநாட்டில் திறந்து வைக்கப்பட்டன. அதில் பேசிய பிரமுகர்களும் ஹரிஜனங்களின் உத்தாரணத்துக்கான வழி வகைகளைத் தெளிவாக எடுத்துச் சொன்னார்கள்.

## 'ஐக்கியம் அடைவோம்'

"மகாத்மா காந்தியின் மகத்தான முயற்சியினாலேயே இன்று ஹரிஜனங்கள் இவ்வளவு அதிக முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள். இன்னும் சில வருஷங்களில் தீண்டாமை முற்றிலும் ஒழிந்து நாம் மாபெரும் ஹிந்து சமூகத்துடன் ஐக்கியம் அடைவோம் என்பதில் சந்தேகமில்லை. பாரதநாட்டின் தந்தை காந்தி மகான் மேற்கொண்ட வழியைப் பின்பற்றி காங்கிரஸ் சர்க்கார்கள் ஹரிஜனங்களின் முன்னேற்றத்துக்கான முறைகளை ஹிருதய பூர்வமாகக் கைக்கொண்டு வருகிறார்கள். எனவே ஹரிஜனங்களிடையே அனாவசியமான பிளவையும் வேற்றுமையையும் உண்டுபண்ண முயற்சித்துத் துவேஷப் பிரசாரம் செய்து வரும் விஷமிகளின் பேச்சை நம்பி நாம் மோசம் போய்விடக் கூடாது" என்று மந்திரி ஸ்ரீ பரமேசுவரன் ஹரிஜனங்களை எச்சரித்தார். "பௌத்தமதத்தின் உபதேசங்கள்தான் ஹிந்து மதத்திலும் அடங்கியிருக்கின்றன. அப்படியிருக்கப் பௌத்த மதத்தில் சேருமாறு ஹரிஜனங்களுக்கு ஆலோசனை கூறுவது அர்த்தமற்றது. மகான்களான நந்தனும் திருவள்ளுவரும் திருப்பாணாழ்வாரும் எந்த மதத்தில் தோன்றினார்களோ அந்த மதத்தை நாம் ஏன் புறக்கணிக்க வேண்டும்?" என்று ஸ்ரீ முனிசாமி பிள்ளை கூறினார். ஹரிஜனங்களிடையே சிலர் செய்துவரும் துஷ்பிரசாரத்தைக் கண்டித்தும், ஹரிஜனங்கள் காங்கிரஸ் சர்க்காருக்குப் பரிபூரண ஆதரவு அளிக்க வேண்டும் என்றும் மகாநாட்டில் தீர்மானங்களும் நிறைவேறின. எனவே துஷ்பிரசாரத்தினால் குழப்பம் அடையாமல் ஹரிஜனங்கள் நேர்மையான வழியைக் கடைப் பிடிப்பதற்கு உதவி புரிந்த சென்னை மாகாண ஹரிஜனங்களின் மகாநாட்டைப் பாராட்டுவோமாக!

# திக்விஜயக் காட்சிகள்!

"இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய மாபெரும் அரசியல் சிற்பிகளில் பண்டித ஜவாஹர்லால் நேருவும் ஒருவர். இந்தியாவின் சுதந்திர மாளிகையைச் சிருஷ்டித்த ஒரு சில மகாபுருஷர்களில் அவர் ஒருவர் என்பதுடன், ஆசியா நாடுகள் சுதந்திரம் பெறுவதற்குப் பேருதவி புரிந்த பெருமையும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கு உரியது. அவர் குறுகிய புத்தி படைத்த தேசிய வாதி அல்ல, அகில உலகத்தின் பிரஜை, மானிட வர்க்கத்தின் அரும் தொண்டர்."

பண்டித ஜவாஹர்லால் நேரு சில தினங்களுக்கு முன் சிங்கப்பூருக்கு விஜயம் செய்தபோது, தென் கிழக்கு ஆசியாவின் பிரிட்டிஷ் கமிஷனர் ஜெனரலாக இருக்கும் ஸ்ரீ மெல்காம் மெக்டொனல்டு அவ்வாறு ஜவாஹர்லால்ஜியைப் பாராட்டினார்.

பண்டித ஜவாஹர்லால் நேருவின் இந்தோனேஷ்யா விஜயம் அமோக வெற்றியுடன் முடிந்திருக்கிறது.

சில மாதங்களுக்கு முன் அமெரிக்கா ஜவாஹர்லால்ஜியை அழைத்து உபசரித்துப் பாரத நாட்டைக் கௌரவித்ததுடன், தனது நட்பையும் தெரிவித்துக் கொண்டது.

இப்போது இந்தோனேஷ்யா இந்தியாவின் முடிசூடா மன்னரை வரவேற்று உபசரித்து இந்தியாவினிடம் தனது நட்பையும், நல்லெண்ணத்தையும், எல்லாவற்றிற்கும் மேலாகத் தனது நன்றியையும் தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

1945-ம் வருஷம் இரண்டாவது மகா யுத்தம் முடிந்தவுடனே இந்தோனேஷ்யர்கள் குடியரசை ஸ்தாபித்தார்கள்.

மறுபடியும் அங்கு டச்சு ஆதிக்கத்தை நிலை நிறுத்துவதற்கு அமெரிக்காவும் பிரிட்டனும் உதவி புரிந்திராவிடில், இந்தோனேஷ்யர்களுக்கு ஏற்பட்ட எண்ணிக்கையற்ற கஷ்ட நஷ்டங்களும் உயிர்ச்சேதமும் தவிர்க்கப்பட்டிருக்கும்.

இந்தோனேஷ்யர்கள் மூன்று வருஷ காலத்துக்கு மேலாக வீரப்போர் புரிந்தார்கள். மேற்படி சுதந்திரப் போரில் எத்தனையோ மக்கள் பலியாயினர். எத்தனையோ நகரங்கள் அழிந்தன. இறுதியில் அங்கு டச்சு ஆதிக்கம் நிலைத்து விடுமோ என்று தோன்றியது. வல்லரசுகள் டச்சுக்காரர்களுக்குப் பக்க பலமாக இருந்ததால், இந்தோனேஷ்யாவின் சுதந்திரம் உதயமாவதற்குச் சமீபத்தில் வழியில்லை என்றே எண்ண வேண்டியிருந்தது.

அந்த நிலைமையில்தான் சர்வதேச மேடையில் இந்தோனேஷ்யாவின் கட்சியை இந்தியா எடுத்துக்கொண்டு நீதி கிடைப்பதற்காகப் போராடியது. அந்த முயற்சிக்கு வல்லரசுகள் விரோதமாக இருந்தும்கூட இந்தியா விடாப்பிடியாக நின்று வெற்றி பெற்றது.

• • •

அதைத் தவிர, பண்டித ஜவாஹர்லால் நேரு புது டில்லியிலே ஆசியா நாடுகளின் மகாநாட்டைக் கூட்டி 1950-ம் வருஷம் முடிவதற்குள் இந்தோனேஷ்யாவுக்குச் சுதந்திரம் அளிக்கவேண்டும் என்று டச்சு சர்க்காரை எச்சரித்தார்.

1950 முடிவதற்குள்ளாவது, டச்சுக்காரர்கள் சுதந்திரம் அளிப்பதாவது என்று அப்போது பலரும் சந்தேகம் கொண்டார்கள். ஜவாஹர்லால்ஜியின் வெளிநாட்டுக் கொள்கையைக் கண்டித்தார்கள். இந்தியா வல்லரசுகளை விரோதித்துக் கொள்ளாமல் அவைகளின் பக்கம் சாய்ந்து கொடுப்பது தான் புத்திசாலித்தனம் என்றும், இந்தியாவின் சொந்த நலன்களைப் பாதுகாக்க அதுதான் தந்திரமான வழி என்றும் கருதினார்கள்.

ஆனால் பின்னர் நிகழ்ந்த சம்பவங்கள் பண்டித ஜவாஹர்லால் நேருவின் கொள்கை முற்றிலும் சரி என்பதை நிரூபித்து விட்டன.

வல்லரசுகளின் ஆதரவினால் மமதை கொண்ட டச்சுக்காரர்கள் ஆசியா நாடுகளின் ஏகோபித்த எழுச்சியைக் கண்டு கலங்கிப் போர் வெறியைக் கைவிட்டார்கள்.

ஆசியா நாடுகள் மகாநாட்டின் கட்டளைக்கு இணங்க 1950-ம் ஆண்டு முடிவதற்குள் இந்தோனேஷ்யாவுக்குச் சுதந்திரமும் அளித்தார்கள்!

ஜவாஹர்லால்ஜியின் அரிய முயற்சி இந்தோனேஷ்யாவின் சுதந்திரத்துக்கு முக்கிய காரணமாக அமைந்ததுடன்,

இன்னும் சுதந்திரமின்றித் தத்தளிக்கும் ஆசிய நாடுகளுக்கும் கதி மோட்சம் ஏற்படும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்ற நம்பிக்கையை உண்டுபண்ணி யிருக்கிறது.

எனவே, ஆசிய நாடுகள் சுதந்திரம் பெறுவதற்குப் பேருதவி புரிந்த பெருமை நமது அருமைத் தலைவருக்கு உரியது என்று தென்கிழக்கு ஆசியாவில் பிரிட்டிஷாரின் ஏகப் பிரதிநிதியாக இருக்கும் ஸ்ரீ மெல்காம் மெக்டொனால்டு கூறியது மிகையாகுமா?

இந்தோனேஷ்யா நிர்க்கதியாக இருந்தபோது அதற்குப் பூரண ஆதரவு காட்டிய இந்தியாவின் ஒப்பற்ற தலைவருக்கு இந்தோனேஷ்யர்கள் நன்றி தெரிவித்து ராஜோபசாரம் செய்தது முற்றிலும் நியாய மல்லவா!

நூற்றுக்கணக்கான மைல்கள் வரையில் இந்தோனேஷ்ய ரஸ்தாக்களின் இருபுறத்திலும் லட்சோப லட்சம் ஜனங்கள் நின்று சந்தோஷ ஆரவாரத்துடனும் ஜே கோஷங்களுடனும் ஜவாஹர்லால்ஜியை வரவேற்றுத் தங்களுடைய அன்பைச் சொரிந்தார்கள்.

அங்கு ஜவாஹர்லால்ஜியின் இவ்விஜயம் ஆரம்பமானதிலிருந்து நமது தலைவர் அங்கிருந்து விடை பெற்றுக் கொள்ளும் வரையில் இந்தோனேஷ்யக் குடியரசின் தலைவர் டாக்டர் சுகர்ணோ கூடச் சென்று அவருக்கு மரியாதை செய்தார்; 'சகோதரர் நேரு' என்று கூறி இந்தோனேஷ்ய மக்களுக்குப் பெருமிதத்துடன் அறிமுகம் செய்து வைத்தார்.

இவ்வாறாகப் பண்டித ஜவாஹர்லால் நேருவின் அரசியல் நீதியும் நெறியும் இந்தியா—இந்தோனேஷ்யாவின் பண்டைய காலத் தொடர்பை மறுபடியும் புதுப்பித்துக் கொண்டதோடு, எதிர்காலத்தில் சக்தியுடன் விளங்கக் கூடிய ஆசிய நாடுகளின் ஆதரவையும் நல்லுறவையும் நல்லெண்ணத்தையும் பெறுவதற்கு அசைக்க முடியாத அஸ்திவாரமாக அமைந்திருக்கின்றன.

* * *

ஜவாஹர்லால்ஜி சிங்கப்பூருக்கு விஜயம் செய்த போது பொதுவாக வெளிநாடுகளிலும் குறிப்பாக மலாய் நாட்டிலும் உள்ள இந்தியர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையைத் தெளிவு படுத்தினார்.

"மலேயாவிலுள்ள இந்தியர்கள் இந்த நாட்டின் நலன்களுக்குக் குந்தகம் விளைவிக்காமல் இந்த நாட்டினிடம் விசுவாஸத்துடனும் நேர்மையுடனும் நடந்து கொள்ள வேண்டும்.

"இந்தியர்கள் எந்தெந்த நாட்டில் வசிக்கிறார்களோ அந்தந்த நாட்டில் உள்ள மற்ற சமூகங்களோடு ஐக்கிய பாவத்துடன் இருக்க வேண்டும். வெளிநாடுகளில் இருந்தும் கூட மாகாண வெறி கொண்டு சிலர் காரியங்களில் ஈடுபடுவது கண்டிக்கத்தக்க விஷயமாகும்.

"வெளிநாடுகளில் வசிக்கும் இந்தியர்கள் யாவரும் தாங்கள் இந்தியாவின் ஸ்தானிகர்கள், பிரதிநிதிகள் என்று எண்ணி நடக்க வேண்டும். பாரத நாட்டின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படக்கூடிய எந்தக் காரியத்தையும் செய்யக் கூடாது. தாங்கள் வசிக்கும் நாட்டுக்கும் இந்தியாவுக்கும் நல்லுறவும் நல்லெண்ணமும் வளர்ச்சியடையுமாறு நடந்து கொள்ள வேண்டும்" என்று ஜவாஹர்லால்ஜி கூறியதைக் கடல் கடந்து வசிக்கும் பாரத நாட்டு மக்கள் மனதில் உன்னித் தங்களுக்கும் தாய் நாட்டுக்கும் பெருமையைத் தேடிக் கொள்ள வேண்டும்.

பிற நாடுகளுக்குத் தீங்கு நினைக்கவோ துரோகம் செய்யவோ இந்தியா எக்காலத்திலும் உடன்படாது என்பதை அந்தந்த நாட்டு சர்க்கார்கள் நன்கு உணர்ந்து, அங்குள்ள இந்தியர்களுக்கு உதவி செய்யமுற்படாவிட்டாலும் உபத்திரவமாவது செய்யாமல் இருக்க வேண்டும்.

பண்டித ஜவாஹர்லால் நேருவின் இவ்விஜயம் குறிப்பாக இந்தியர்களின் உரிமைகளுக்கு உலைவைக்க முற்படும் நாடுகளின் மன மாற்றத்துக்கும், அந்த நாடுகளில் இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள துன்பங்களும் தொல்லைகளும் தீருவதற்கும் காரணமாக அமையும் என்று நம்புகிறோம்.

---

அட்டைப்பட விளக்கம்

இந்த இதழில் வேறு பக்கத்தில் "பொய் மான் கரடு" என்னும் கதை ஆரம்பமாகிறது. அதில் வரும் ஒரு காட்சி இந்த இதழின் அட்டைப்படமாகத் திகழ்கிறது.

# ஓ! அன்னபூரணி!

[சென்னை மாகாணத்தில் எட்டு அவுன்ஸ் அரிசியில் ஒரு அவுன்ஸ் குறைந்து இனி ஏழு அவுன்ஸ் அரிசி கொடுக்கப்படும் என்று சென்னை சர்க்கார் தெரிவித்திருக்கிறார்கள். குறைக்கப் போகிறது எட்டில் ஒன்றுதான். ஆயினும் அநேகம் பேர் இப்போதே வாயினும் வயிற்றினும் அடித்துக் கொள்கிறார்கள். பிரச்னை இவ்வளவு முக்கியமானதாயிருப்பதால் இதைப் பற்றி இந்தியா தேசத்தின் பல பிரமுகர்களுடைய அபிப்பிராயங்களையும் திரட்டிக் கீழே வெளியிடுகிறோம்.]

பிரதம மந்திரி ஜவாஹர்லால்:—இந்த நூற்றாண்டின் முக்கியமான பிரச்னை ஆசியா கண் விழித்திருப்பதுதான். அதிலும் கிழக்காசியப் பிரதேசங்கள் வரப்போகும் யுத்தத்தில் மிக முக்கியம் பெற்று விளங்கும் என்பதில் சந்தேகமில்லை. கிழக்கு ஆசியப் பிரதேசங்களில் முக்கியமான உணவுப் பொருள் அரிசி. ஆகையால் நம்முடைய கிழக்காசிய நாட்டுச் சகோதரர்களை உத்தேசித்து நாம் எந்தவிதத் தியாகமும் செய்யப் பின்வாங்கக் கூடாது. எட்டு அவுன்ஸ் அரிசியில் ஒரு அவுன்ஸ் குறைத்தது பிரமாதம் அல்ல. எட்டு அவுன்ஸ் அரிசியில் ஒன்பது அவுன்ஸ் அரிசியைக் குறைத்தாலும் நாம் அந்தத் தியாகத்துக்குத் தயாராயிருக்கவேண்டும். எட்டு அவுன்ஸில் ஒன்பது அவுன்ஸை எப்படிக் குறைக்க முடியும் என்று கேட்கிறீர்கள்? நல்ல கேள்வி. பணமிருந்தால் எல்லாம் முடியும்! சுதந்திர இந்தியாவில் நாம் நம்முடைய கடமையை 100-க்கு 105 பங்கு செய்வது என்று தீர்மானித்துக் கொண்டோமானால் எட்டு அவுன்ஸ் அரிசியில் ஒன்பது அவுன்ஸ் அரிசியைக் குறைத்துக் கொள்வதுதானா பிரமாதம்? நான் இந்தியா திரும்பி வந்ததும் 'பிளானிங் கமிஷன்' வேலை ஆரம்பிக்கப்படும். 'பிளானிங் கமிஷன்' மட்டும் வேலை செய்யத் தொடங்கி விட்டால் இம்மாதிரியான எல்லாப் பிரச்னைகளையும் ஒரேயடியாகத் தீர்த்து விடலாம்!

சர்தார் வல்லபாய் படேல்:—இந்தியாவின் அறுநூற்றுச் சொச்சம் சுதேச மன்னர்களின் தியாகங்களை எண்ணிப் பாருங்கள். அவர்கள் எவ்வளவு விஸ்தாரமான ராஜ்யங்கள், அதிகாரங்கள், பொக்கிஷங்கள், அந்தப்புரங்கள், பட்டத்து யானைகள், பந்தயக் குதிரைகள் எல்லாவற்றையும் தியாகம் செய்திருக்கிறார்கள்? அவர்களுடைய தியாகத்தை நினைக்க ரோமாஞ்சலி உண்டாகிறது! அப்படியிருக்க, ஒரு அவுன்ஸ் அரிசியைத் தியாகம் செய்வது ஒரு பெரிய காரியமா! மேலும் சென்னை மாகாணத்தில் உங்கள் காங்கிரஸ் தலைவர்கள் போடும் சண்டைகள் சகிக்க முடியவில்லை. எத்தனை சமரசம் செய்து வைத்தாலும் மறுபடியும் பொத்துக்கொண்டு சண்டை மூண்டு விடுகிறது. அடிக்கடி என் பிராணனை வந்து வாங்குகிறார்கள். ஒரு அவுன்ஸ் அரிசி குறைந்தாலாவது கொஞ்சம் புத்தி வந்து சண்டை போடாமல் இருப்பார்களா என்று பார்க்கலாம். அவ்வளவுதான், கப்சிப்! கபர்தார்!

உணவு மந்திரி கே. எம். முன்ஷி:—நான் இந்திய அரசாங்கத்தின் உணவு மந்திரியாயிருக்கும் வரையில் யாரும் எதற்காகவும் கவலைப்பட வேண்டியதில்லை. ஒரு அவுன்ஸ் அரிசிக்குப் பதிலாக இரண்டு அவுன்ஸ் பழமும் மூன்று அவுன்ஸ் கறிகாய் கிழங்குகளும் உற்பத்தி செய்து கொள்ள உடனே முயற்சி தொடங்குங்கள். ஜூலை முதல் வாரத்தில் மொத்தம் ஒரு கோடி இருபத்தைந்து லட்சம் பழ மரங்களை நடுங்கள். அத்துடன் பத்து கோடியே முப்பது லட்சம் நெல்லுக் காய்ச்சி மரங்களையும் நடுங்கள். அரிசியை மறந்து ஆடுங்கள்; பாடுங்கள்! வன மகோத்ஸவம் கொண்டாடுங்கள்!

குடியரசுத் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத்:—காந்தி மகாத்மாவின் ஆவி நம்மை ஆட்கொள்ளட்டும். அனைவரும் சர்வோதய சமாஜத்தில் அங்கத்தினராகச் சேருங்கள். ஒரு அவுன்ஸ் அரிசி குறைந்ததற்குப் பதிலாக மற்ற ஏழு அவுன்ஸ் அரிசியைத் தவிட்டோடும் உமியோடும் சேர்த்துச் சாப்பிடுங்கள். தவிடும் உமியும் தின்னும் மாடுகள் எவ்வளவு செழிப்பாயிருக்கின்றன? அவற்றுக்கு இருமல், சுரம், ஆஸ்த்மா, மார்ச்சளி ஏதாவது வருவதுண்டா? தவிடும் உமியும் இல்லாத அரிசியை மட்டும் வேக வைத்துச் சாப்பிடும் மனிதர்கள் எவ்வளவு துர்ப்பலமாயிருக்கிறார்கள்! காந்தியடிகளின் திருவடிகளே சரணம்! வாழ்க வர்தாவின் ஜோதி! ஜே ஹிந்த்!

மேற்கு வங்காள முதல் மந்திரி டாக்டர் பிதன் சந்திர ராய்:—ஒரு அவுன்ஸ் அரிசி குறைந்ததற்காக மதராஸிகள் இவ்வளவு தடபுடல் படுத்துவது எனக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. வங்காளத்

தில் நாங்கள் சில சமயம் தினம் நாலு அவுன்ஸ் அரிசியுடன், இரண்டு பவுண்டு ரஸகுல்லாவும், மூன்று பவுண்டு மீனும் மட்டும் சாப்பிட்டு விட்டு வயிற்றைக் கட்டி வாழ்ந்து வந்திருக்கிறோம். அடேயப்பா! ஏழு அவுன்ஸ் அரிசி போதாது என்கிறீர்களே? ஒழுக்கு வங்காள அகதிகளின்மீது கருணை வைத்து அதில் இரண்டு அவுன்ஸ் அரிசியை எங்களுக்கு அனுப்பி வையுங்கள்.

**மாஜி முதன் மந்திரி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார்**:—தேசத்தில் பாபகிருத்யங்கள் அதிகமாகிப் போய் விட்டன. ஆகையினாலே மழை பெய்யவில்லை என்று நான் அப்பொழுதே எச்சரிக்கை செய்தேன். யாரும் அதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. ஆகையினாலே இன்றைக்கு இந்தக் கதி நேர்ந்திருக்கிறது. சர்க்கார் இலாகாக்களில் ஊழல்கள் அதிகமாகி விட்டன. முக்கியமாக விவசாய இலாகா குட்டிச் சுவராய்ப் போய்க் கொண்டிருக்கிறது என்று எடுத்துக் காட்டினேன். அதையும் அப்போது யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. ஆகையினாலே இன்றைக்கு எல்லாரும் கஷ்டப்பட வேண்டியதுதான். நான் சென்னை முதன் மந்திரியாயிருந்தபோது இந்த மாகாணத்தில் ஐந்து லட்சம் கிணறுகள் கட்டுவதற்குத் திட்டம் போட்டிருந்தேன். அந்தத் திட்டத்தைச் சிகப்பு நாடாவில் கட்டிப் போட்டு விட்டார்கள். ஆகையினாலே இன்றைக்கு முட்டிக் கொள்கிறார்கள். நன்றாய் முட்டிக் கொள்ளட்டும். விதியை வெல்ல யாரால் முடியும்? ஆகையினாலே......

**காங்கிரஸ் அக்கிராசனர் டாக்டர் பட்டாபி சீதாராமய்யா**:—எத்தனையோ பேர் காங்கிரஸ் அக்கிராசனர்களாக இருந்திருக்கிறார்கள். நானுந்தான் காங்கிரஸ் அக்கிராசனர் பதவி வகிக்கிறேன். வகித்து என்ன பிரயோஜனம்? யார் வந்து என்னிடம் யோசனை கேட்கிறார்கள்? மற்றவர்கள்தான் ஒன்றும் கேட்கிறதில்லையென்றால், சென்னை மந்திரிகளாவது கேட்கக் கூடாதா? வேறு ஒன்றும் கேட்காவிட்டாலும் அரிசி ரேஷனைக் குறைக்கிற விஷயமாகவாவது என்னிடம் யோசனை கேட்கக் கூடாதா? கேட்டிருந்தால், இப்போது ஒரு அவுன்ஸாம் இன்னும் கொஞ்ச நாள் கழித்து இன்னொரு அவுன்ஸாம் குறைப்பதற்குப் பதிலாக ஒரேயடியாய் மூன்று அவுன்ஸ் குறைத்து விடுங்கள் என்று சொல்லியிருப்பேன். 1923-ம் வருஷத்தில் காக்கினாடா காங்கிரஸில் மௌலானா முகம்மது அலி அக்கிராசனப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தபோது. நான் பக்கத்திலிருந்தவரிடம் என்ன சொன்னேன் தெரியுமா? இவர் எந்தக் கடையில் அரிசி வாங்கிச் சாப்பிடுகிறார் என்று கேட்டேன். அதே கேள்வியை இன்றைக்கு நம் முதன் மந்திரி குமாரஸ்வாமி ராஜா விஷயத்தில் கேட்க வேண்டியதாயிருக்கிறது!

**ஸ்ரீ ராமகிருஷ்ண டால்மியா**:—இந்த உலகத்தையே காப்பாற்றுவதற்கு நான் ஏற்பாடு செய்துகொண்டிருக்கும் போது, கேவலம் ஒரு அவுன்ஸ் அரிசி விஷயத்தைப் பற்றி என்னிடம் வந்து கேட்பது ஆச்சரியமாயிருக்கிறது! எனக்கும் என் கம்பெனிகளுக்கும் என் பந்துக்களுக்கும் எட்டு வருஷத்துக்கு வருமான வரி இல்லை என்று சொல்லி விட்டால், உங்களுடைய ஒரு அவுன்ஸ் அரிசிப் பிரச்னையை அந்த க்ஷணமே நான் தீர்த்து வைத்து விடுவேன். என் ஒருவனால்தான் அது முடியும். வேறு யாராலும் முடியாது. சர்தார் வல்லபாய் படேலினால்கூட முடியாது. அரிசி போதவில்லை என்று சொல்லுகிறவர்கள் ஒவ்வொருவருடைய வாயிலும் ஒரு அவுன்ஸ் செமண்டைப் போட்டு இரண்டு அவுன்ஸ் தண்ணீரை விட்டுவிட வேண்டியது. அப்புறம் அவர்கள் ஏன் அரிசி கேட்கப் போகிறார்கள்?

---

# யார் சொன்னது?



மாணவன்:—மாமா! எனக்கு மெடிக்கல் காலேஜில் இடம் கிடைக்கவில்லை!

பெரியவர்:—நீதான் அதிக மார்க் வாங்கியிருக்கிறாயே, உனக்கு ஏன் இடம் கிடைக்கவில்லை?

மாணவன்:—நான் பிராமணனாம். அதனால் இடம் கிடையாதாம்.

பெரியவர்:—உன்னைப் பிராமணன் என்று யாரடா சொன்னது? நீதான் பூணூல் போட்டதாளிலிருந்து ஒரு நாள்கூடச் சந்தியாவந்தனம் பண்ணினது கிடையாதே?

# புத்த கேந்திரம்



## 4. பர்மா

ஜெயமணி

“கோவில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்” என்பது தமிழ் மூதாட்டியின் கட்டளை. அதற்கிணங்க, குறிப்பாகத் தமிழ் நாட்டிலே கோவில் இராத ஊரே இல்லை எனலாம். எனினும் இந்த அதிசயம் தமிழ் நாட்டின் ஏகபோக உரிமை என்று சொல்லுவதற்கில்லை. ஒருவேளை தமிழ் நாட்டில் கோவில் இல்லாத ஒரு சில குக்கிராமங்கள் இருந்தாலும் இருக்கலாம். ஆனால் பர்மாவில் கோவில் இல்லாத நகரமோ அல்லது கிராமமோ இல்லவே இல்லை! பர்மாவுக்கு “கோவில்கள் மயமான நாடு” என்றும் ஒரு பெயர் உண்டு. எங்கு சென்றாலும் சித்திர விசித்திரமான சிற்பச் சிறப்புடன் கூடிய கோவில்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. பர்மாவில் உள்ள “சுவேதகன்” என்ற தங்கக் கோவில் உலக அதிசயங்களில் ஒன்று என்பதிலிருந்து அந்த நாட்டில் கோவில்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் இருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

பர்மாவின் தலைநகரான ரங்கூனில் உள்ள சுவேதகன் கோவில் 367 அடி உயரம் இருக்கிறது. அதன் சிகரத்தில் ஆயிரத்து ஐந்நூறு சிறிய மணிகள் தொங்கவிடப்பட்டிருக்கின்றன. அந்த மணிகளின் நாதம் மனிதனின் உள்ளத்தில் சாந்தியை உண்டு பண்ணுவதாக இருக்கிறது என்று கூறுகிறார்கள். அந்தக் கோவிலில் புத்த மகானின் சிகை அடக்கம் செய்து வைக்கப்பட்டிருக்கிறது.

*

பல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழர்கள் பர்மாவில் வர்த்தகத் துறையிலும் கலாசார மத விஷயங்களிலும் ஆதிக்கம் செலுத்தி வந்தார்கள் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. மத்திய பர்மாவிலுள்ள பாகனில் இருக்கும் பிரபல கோவில்கள் இன்றும் தமிழ் நாட்டுச் சிற்பிகளுடைய சிறப்பின் சின்னங்களாக விளங்கி வருகின்றன. பல நூற்றாண்டுகளுக்கு முன் சிறு சிறு படகுகளில் அங்கு சென்று குடியேறி ஸ்தாபித்த தமிழர்களின் சந்ததிகள் பெகு முதலிய இடங்களில் ஏராளமாக இருக்கிறார்கள்.

பர்மாவில் இந்தியர்களின் சாம்ராஜ்யமும் இருந்த காலம் உண்டு. எட்டு, ஒன்பதாவது நூற்றாண்டுகளில் விமல மன்னனும் ராணி பத்ரதேவியும் பர்மாவின் சில பாகங்களை ஆட்சி புரிந்து வந்தார்கள் என்று தெரிகிறது. அனவரதா, நராதிபதி முதலிய பெயர்கள் பர்மாவில் இன்றும் பிரபலமாக விளங்கி வருவது குறிப்பிடத் தக்கதாகும். பதினேழாவது நூற்றாண்டுக்குப் பிறகுதான் பர்மாவில் வெள்ளையர்கள் முதன் முதலாகக் காலடி வைக்கத் தொடங்கினார்கள்.

பர்மா மீது மங்கோலியர்கள் படையெடுப்பதற்கு

மூன் பாகன் நகரம் இருநூறு ஆண்டுகள் வரையில் பர்மாவின் தலைநகராக விளங்கி வந்தது. பாகன் மிகவும் அழகான நகரம் என்பதுடன், அங்குள்ள ஆனந்த ஆலயம் புத்த சிற்பத்தின் சிகரமாகத் திகழ்கிறது. அந்த நகரத்தின் பாழான கட்டிடங்கள் கூட இன்று அழகாகத் தோன்றுவதிலிருந்து, பண்டைய காலத்தில் அவை எவ்வளவு மகோன்னதமாக விளங்கியிருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். பதினோராவது நூற்றாண்டிலிருந்து பதின்மூன்றாவது நூற்றாண்டு வரையில் பாகன் நகரம் சிறப்புற்று விளங்கியது.

பிறகு சகோதரர்கள் சண்டையிட்டுக் கொண்டு சொத்துக்களைப் பங்கிட்டுக் கொள்வதுபோல் பர்மியர்களிடையே சண்டை ஏற்பட்டதால், பர்மா வடக்கு பர்மா என்றும் தெற்கு பர்மா என்றும் பிரிக்கப்பட்டது. எனினும் பதினாறாவது நூற்றாண்டில் அவர்களிடையே ஒரு மன்னர் தோன்றி இரு பிரிவுகளாக இருந்த பர்மாவை மறுபடியும் ஒன்றுபடுத்தினார். அதிலிருந்து பெகு பர்மாவின் தலைநகராக விளங்கியது.

இந் நிலையில் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் நாளுக்கு நாள் பலம் அடைந்து வந்தது. இறுதியாக அவர்கள் பர்மாவின் தலையிலும் கை வைக்க முற்பட்டார்கள். பர்மியர்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் நடந்த போர்களில் பர்மியர்கள் தோல்வியடைந்ததால் பிரிட்டிஷார் கொஞ்சம் கொஞ்சமாக பர்மாவை ஆக்கிரமித்து வந்து, 1886-ம் வருஷம் பர்மா முழுவதையும் தங்கள் வசப்படுத்திக் கொண்டு விட்டார்கள்.

கொடிய பஞ்சம் காரணமாக 1931-ம் வருஷம் பர்மாவில் ஏற்பட்ட புரட்சியை அடக்கப் பிரிட்டிஷார் கைக்கொண்ட கோரமான அடக்கு முறைகள் சரித்திரத்திலே துக்ககரமான ஒரு படலமாகும்.

பிரிட்டிஷாரின் ஆட்சியில் பர்மா இந்திய மாகாணங்களில் ஒன்றாகவே இருந்து வந்தது. ஆனால் இந்தியாவில் சுதந்திரப் போராட்டத்தின் உக்ரம் உச்ச நிலையை அடையவே, இந்தியாவை இழந்தாலும் பர்மாவையாவது தங்களுடைய ஆதிக்கத்திலிருந்து நழுவ விடக் கூடாது என்ற எண்ணத்துடன் 1937-ம் வருஷம் பிரிட்டிஷார் பர்மாவை இந்தியாவிலிருந்து பிரித்து விட்டார்கள். மேற்படி பிரிவினையை அப்போது பர்மியர்கள் எவ்வளவோ எதிர்த்தும் கூட பிரிட்டிஷார் அதைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் தங்களுடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டார்கள்.

இந்தியாவிலிருந்து பிரிவதைக் கூட விரும்பாத அதே பர்மியர்கள் இப்போது 'பர்மா பர்மியர்களுக்கே' என்ற தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அங்கு சர்க்கார் உத்தியோகத்திலுள்ள இந்தியர்களை விரட்ட முற்பட்டிருப்பதும், அங்குள்ள இந்தியர்களின் சொத்துக்களை நியாயமான நஷ்ட ஈடு இல்லாமல் அபகரித்துக் கொள்ள முற்பட்டிருப்பதும் கால மாறுதலின் விசித்திரம் அல்லவா?



பர்மாவுக்குச் சுவர்ண பூமி என்றும் ஒரு பெயர் வழங்கப் படுகிறது. அங்கு நெல் வயல்கள் அபரிமிதமாக இருப்ப





பர்மா மலைப்பிரதேசத்தில் வசிக்கும் பெண்

தாலும், கண்ணுக்கு எட்டிய வரையில் நெற் கதிர்கள் தங்க நிறமாக இருப்பதாலுமே அந்த நாட்டுக்குச் சுவர்ணபூமி என்ற பெயர் வழங்கலாயிற்று.

பர்மாவைச் சுற்றி மலைகள் இயற்கைச் சுவர்களாக இருப்பதால் பர்மாவுக்கும் அண்டையிலுள்ள நாடுகளுக்கும் தரை வழியாகத் தொடர்பு வைத்துக் கொள்வது கஷ்டமாக இருந்தது. சீன-ஜப்பான் யுத்தம் மும்முரமாக நடந்தபோது பிரிட்டனும் அமெரிக்காவும் கப்பல்களில் சீனாவுக்குப் போர்த் தளவாடங்களை அனுப்ப முடியவில்லை. சீனத் துறை முகங்களுக்குச் செல்லும் கப்பல்களையெல்லாம் ஜப்பானியர்கள் தாக்கி மூழ்கடித்து வந்ததே அதற்குக் காரணம். எனவே, சீனாவுக்கு யுத்த சாதனங்களையும் இதர சாதனங்களையும் தரை மார்க்கமாய் அனுப்புவதற்காகப் பர்மாவிலிருந்து சீனாவுக்கு ஒரு ரஸ்தாவை அமைக்கலானார்கள். மேற்படி ரஸ்தா வேலை 1937-ம் வருஷம் ஆரம்பமாகி ஒன்றரை வருஷ காலத்தில் முடிவடைந்தது. அந்த அசுர வேலையில் இரண்டு லட்சத்துக்கு மேற்பட்ட சீன, பர்மியத் தொழிலாளர் ஈடுபட்டனர். அப்போது கொசுக்களுக்கும், நோய் நொடிகளுக்கும், மழைக்கும் இரையாகி மடிந்த தொழிலாளர்களின் தொகை எத்தனை எத்தனை ஆயிரமோ, சொல்லி முடியாது!

இரண்டாவது உலக மகா யுத்தம் நடந்தபோது ரங்கூன்-பாங்காக் ரயில் பாதை போடுவதற்காக ஜப்பானியர் ஆயிரக்கணக்கான இந்தியத் தொழிலாளர்களைக் கொண்டு போய் பலியிட்டார்கள் அல்லவா? மேற்படி பாதையை நிர்மாணிப்பதற்காகப் பலியான தொழிலாளர்களின் தொகையைக் காட்டிலும் பர்மா-சீனா ரோடு போடுவதற்காகப் பலியான தொழிலாளர்களின் தொகை அதிகம் என்பதை யாரும் மறந்து விடக்கூடாது!

எத்தனையோ ஆயிரம் தொழிலாளர்களின் உயிர்த் தியாகத்தினால் நிர்மாணிக்கப்பட்ட பர்மா ரோடு இன்று உலகப் பிரசித்தி பெற்று விளங்குகிறது. ரங்கூனிலிருந்து கங்கிங் வரையில் அந்த ரோடின் நீளம் ஆயிரத்து எண்ணூறு மைல்களுக்கு மேல் இருக்கிறது.

*

இந்தியா, சீனா, இந்தோ சீனா, சயாம், மலேயா முதலிய ஐந்து நாடுகளால் சூழப்பட்டுள்ள பர்மாவின் மொத்த விஸ்தீரணம் 2,61,610 சதுர மைல்கள் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். பர்மா கடற்கரைப் பிரதேசங்கள் வளம் பொருந்தியவை என்றாலும், அந்த நாட்டைச் சேர்ந்த மற்ற இடங்கள் காடுகளாகவும் மேடுகளாகவும் மலைகளாகவும் இருக்கின்றன. ஹிமய மலையிலிருந்து செல்லும் மலைத் தொடர்கள் பர்மாவுக்கும் சீனாவுக்கும் பர்மாவுக்கும் இந்தியாவுக்கும் நடுவில் பிரம்மாண்டமான சுவர்களைப்போல் நிற்கின்றன.

பர்மாவிலுள்ள நதிகளில் ஐராவதி தான் முக்கியமானது. இந்த நதி ஆயிரத்து ஐந்நூறு மைல் நீளம் இருக்கிறது. பர்மாவிலுள்ள நெல் வயல்களின் நீர்ப் பாசனத்துக்கு இந்த நதி பேருதவியாக இருப்பதுடன், கடலிலிருந்து சுமார் ஆயிரம் மைல் தூரத்துக்கு அந்த நதியின் வழியாகக் கப்பல்கள் செல்லுவதால், சாமான்களின் போக்கு வரத்துக்கும் அந்த நதி மிகவும் வசதியாக இருக்கிறது.

தேக்கு மரத்துக்கும் மூங்கிலுக்கும் பர்மா பிரசித்தி பெற்றது.

பர்மா காடுகளில் பலவகை மிருகங்கள் இருக்கின்றன என்றாலும், அங்கு யானைகளின் தொகைதான் அதிகம். ஆசியாவின் மற்ற நாடுகளில் உள்ள யானைகளைக் காட்டிலும் பர்மா யானைகள் பெரிதாகவும் இருக்கின்றன. வெட்டப்பட்ட மரங்களை வெகு தூரம் தூக்கிச் சென்று ஒழுங்காகவும் வரிசையாகவும் அடுக்குவதில் பர்மா யானைகள் மிகவும் தேர்ச்சி பெற்

றவை. எனவே அவைகளிடம் பயிற்சி பெறுவதற்காக இந்தியாவிலிருந்து கூட யானைகளை அனுப்பும் வழக்கம் உண்டு!

பர்மாவில் இன்னும் கண்டு பிடிக்கப் படாத சுரங்கச் செல்வம் நிறைய இருக்கிறது என்று தெரிகிறது. அங்கு ஏராளமாக பெட்ரோல் உற்பத்தியாவதுடன், வெள்ளி, ஈயம், தாமிரம், துத்தநாகம் முதலிய பல்வேறு உலோக வகைகளும் கிடைக்கின்றன.

பர்மாவில் அபரிமிதமான இயற்கைச் செல்வம் இருப்பதால் அது பொருளாதார உலகத்தில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. அங்கு இரண்டு கோடி ஏக்கர்களுக்கு மேற்பட்ட காடுகள் இருப்பதால் உலகம் முழுவதற்கும் தேவையான தேக்கு மரங்களில் பாதிக்கு மேல் பர்மாவிலிருந்து ஏற்றுமதி யாகின்றன. பர்மா தேக்கு மரங்களின் ரகம் சிறந்தது என்பதும் பிரசித்தமானது. அங்கு ஒரு கோடி ஏக்கர்களுக்கு மேல் நெல் விளைவது பர்மாவின் சுபிட்சத்துக்கு எடுத்துக் காட்டாகும். பர்மா அரிசி வெளிநாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதியாவதால் ரங்கூனில் முதல்தரமான பல நவீன அரிசி மில்கள் இருக்கின்றன.

நெல் விளைச்சலில் பர்மா உலகத்திலேயே முக்கிய ஸ்தானம் வகிக்கிறது. அங்கு வருஷந்தோறும் எழுபது லட்சம் டன் அரிசி உற்பத்தியாகிறது. அதில் பாதிக்கு மேல் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியாவதால், உணவு விஷயத்தில் பர்மியர்களுக்குப் பற்றாக் குறை என்ற கஷ்டமே ஏற்படுவதற்கில்லை. அரிசி, எண்ணெய், தேக்கு இவற்றை ஏற்றுமதி செய்வதன் மூலம் பர்மாவுக்குப் பெரும் தொகை வருமானம் கிடைக்கிறது.

பர்மாவில் மொத்தம் ஒன்றரைக் கோடி ஜனங்களுக்கு மேல் இருக்கிறார்கள். அவர்களில் பர்மியர் தொண்ணூறு லட்சமும், கரேன் ஜாதியினர் பன்னிரண்டு லட்சமும், ஷான் ஜாதியினர் பத்து லட்சமும் இருக்கிறார்கள். இவர்களைத் தவிர அங்கு பத்து லட்சம் இந்தியர்களும் ஒன்றரை லட்சம் சீனர்களும் இதர வகுப்பினரும் இருக்கிறார்கள்.

கரேன் ஜாதியினர் அதிக நாகரிகம் இராதவர்களாயினும் பரம்பரையாகச் சிறந்த போர் வீரர்களாக இருந்து வருகிறார்கள். அவர்களுக்கும் சுதந்திர பர்மா சர்க்காருக்கும்தான் சென்ற பல மாதங்களாக உக்ரமான போர் நடந்துவருகிறது.

# முச்சந்தி

துதிக்கையர் எழுதுகிறார்

“மரம் நடுவோம்—மரம் நடுவோம்!
மாவனம் பூவனம் வளர்த்திடுவோம்!
மாம்பழம் கொய்யா ஆரஞ்சு—
மாதுளை திராக்ஷை வாழைப்பழமும்
தேக்குடன் பனைமரம் வேலமரம்
தேசமெல்லாம் வைத்துப் பயிரிடுவோம்!”

திடீரென்று இப்படி ஒரு இசை கிளம்பி என் அகன்ற காதுகளில் வந்து அலைபோல் மோதியது. இது எங்கிருந்து வருகிறது என்று கவனிப்பதற்காக நின்ற இடத்திலிருந்தே நான்கு புறமும் சுற்றித் திரும்பிப் பார்த்தேன்.

மூஷிகன்!—மூஷிகனேதான். அவன் சாதாரணமாகப் பாடிக் கொண்டிருக்கவில்லை. இரண்டு சிறிய மரங்களை இரண்டு தோளிலும் வைத்துப் பாடிக் கொண்டு கீர்த்தனம் செய்து கொண்டிருந்தான்.

மூஷிகனுக்கு இவ்வளவு கவிதா ஞானம், சங்கீத ஞானமெல்லாம் எப்படி ஏற்பட்டது என்று எனக்கே ஆச்சரியமாயிருந்தது. அவன் அந்த இரண்டு மரங்களையும் தோளில் வைத்துக்கொண்டு ஆடிய நாட்டியமும் ஒரு புது முறையாகத்தான் இருந்தது. சில சமயங்களில் சிலருக்கு ஏற்படும் உணர்ச்சிப் பெருக்கு ஆடவும் பாடவும் வைக்கு மல்லவா?

“இதென்ன மூஷிகா? ஆட்டம் பாட்டமெல்லாம் பலமாயிருக்கிறதே? இரண்டு மரங்களை ஏன் தோளில் வைத்துக் கொண்டு ஆடுகிறாய்?” என்று கேட்டேன்.

“இது உங்களுக்குத் தெரியாதா? நமது உணவு மந்திரி இருக்கிறாரே, முன்ஷி, அவர் எல்லோரையும் வன மகோத்சவம் கொண்டாடும்படி வேண்டிக் கொண்டிருக்கிறார்......”

“வன மகோத்சவம் கொண்டாட வேண்டுமென்றால் எங்கேயாவது வனாந்தரங்களுக்கல்லவா போக வேண்டும்? இப்படி மரங்களைத் தோளில் வைத்துக் கொண்டு இந்த முச்சந்தியில் ஆடினால் வீண் கூட்டமல்லவா கூடும்?” என்றேன்.

“கூட்டம் கூட வேண்டுமென்பதற்காகத்தானே ஆடுகிறேன். வன மகோத்சவம் கொண்டாடுவதற்கு வனாந்தரங்களுக்குப் போகவேண்டுமென்பது அவசியமில்லை. சாதாரண இடங்களில்

மரங்களை நட்டு நாடெங்கும் வனங்களையும் சோலைகளையும் ஏற்படுத்துவதுதான் வன மஹோத்சவம் கொண்டாடுவதின் முக்கிய நோக்கம்" என்றான் மூஷிகன்.

"ஆமாம்! அதுவும் உண்மைதான். இந்த மரங்களை எங்கே நடுவதாக உத்தேசம்?" என்றேன்.

"மரங்களை எல்லாம் புண்ணிய க்ஷேத்திரங்களில் நடும்படி உணவு மந்திரி யோசனை கூறி இருக்கிறார். எனக்கு இந்த மூச்சந்தியை விட உயர்ந்த புண்ணிய க்ஷேத்திரம் வேறொன்றும் தென்படவில்லை. ஆகையால் இங்கேயே நீங்கள் ஒரு மரமும் நான் ஒரு மரமும் நடலாம் என்று உத்தேசிக்கிறேன்."

"இந்த மூச்சந்தியிலா நடவேண்டுமென்கிறாய்? இந்த மூச்சந்தியை ஒரு வனமாக்கி விட வேண்டுமென்று உன் உத்தேசமா?" என்றேன்.

"ஏன் வனமாக்கக் கூடாது? நாம் நகரத்திலே வசிப்பதை விட்டு வனப் பிரதேசங்களிலே வசிக்கப் பழகவேண்டும். காய் கனிகளையும் கிழங்கு வகைகளையும் உண்டு திடசரீர முள்ளவர்களாக வாழவேண்டும். கனி குலுங்கும் இனிய மரங்களை வளர்க்க வேண்டும். தனக்கென வாழாப் பிறர் குரியாளராய்த் திகழும் பெருந்தன்மை பொருந்திய வன விருக்ஷங்களை வளர்த்து வணங்க வேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு நகரத்திலும் மலர் கொழித்து மணம் வீசும் சிங்காரப் பூங்காக்களையும் உத்யான நந்தவனங்களையும் உண்டாக்கி நடு இணையற்ற சொர்க்கானுபவ இன்பத்தை அனுபவித்து ஆடிப் பாடுவோம்......" என்று தன் தோளில் இருந்த மரங்களை கீழே இறக்காமலே பிரசங்க மாரி பொழிந்தான் மூஷிகன்.

"வாழ்க முன்ஷியோடு மூஷிகனும்!" என்று மனமார வாழ்த்திவிட்டு "சரி! அந்த மரங்களை கீழே வைத்துவிட்டு இரண்டு பள்ளங்கள் தோண்டு. இப்பொழுதே, அந்த மரங்களை நட்டுத் தண்ணீர் ஊற்றுவோம்" என்றேன்.

மூஷிகன் "மரம் நடுவோம். வனம் வளர்ப்போம்" என்று குதிபோட்டுப் பாடிக்கொண்டே பள்ளம் தோண்டுவதற்காகக் கடப்பாறையும் மண்வெட்டியும் கொண்டுவரப் போனான்.

வனங்களும் தோப்புக்களும் வளர்ப்பதில் இன்னொரு பெரிய சௌகரியமும் இருக்கிறதென்று சமீபத்தில் தெரிய வந்தது. நம் நாட்டில் பெரிய பெரிய 'கால் நடைச் சந்தை'களை யெல்லாம் வனங்களிலும் தோப்புக்களிலும் தான் நடத்துகிறார்கள். இந்தச் சந்தைகள் வருடத்திற்கொரு முறை பல இடங்களில் கூடுவது வழக்கம். பல ஊர்களிலிருந்து மாடு, ஆடு, குதிரை முதலியவைகளைக் கொண்டு வந்து அந்தச் சந்தையில் விற்பது வழக்கம். விற்கிறவர்களுக்கும் வாங்குகிறவர்களுக்கும் விலை பேசித் தீர்த்துவைக்கும் தரகர்களும் ஏராளமாக வருவார்கள். நொண்டி மாட்டையும் சொத்தை மாட்டையும் தரமான மாடு என்று வாய்ப் பந்தல் போட்டு யார் கழுத்திலாவது கட்டுவதில் மகா நிபுணர்கள். இப்படிப்பட்ட சந்தைகளில் ஒன்று சமீபத்தில் தர்பங்காவில் ஒரு மாந்தோப்பில் நடந்தது. ஆனால் அது கால்நடைச் சந்தை இல்லை. கல்யாணச் சந்தை. தர்பங்காவிற்கு சமீபமாக உள்ள 'ஸௌராத்' என்ற கிராமத்திலுள்ள பெரிய மாந்தோப்பில்தான் இந்தச் சந்தை கூடியதாம். இந்தச் சந்தைக்கு தர்பங்கா, பகல்பூர், மோதிஹரி, பூர்ணிமா போன்ற அனேக ஊர்களிலிருந்தெல்லாம் ஏராளமான ஜனங்கள் வந்திருந்தார்களாம். பிள்ளைகளின் பெற்றோர்களையும் பெண்களின் பெற்றோர்களையும் சந்தித்துப் பேச வைத்து அவர்களின் குலப்பெருமை கோத்திர மகிமை எல்லாவற்றையும் ஒருவருக்கொருவர் எடுத்துச் சொல்லிக் கல்யாணங்களை முடித்து வைக்கும் தரகர்களும் ஏராளமாக வந்திருந்தார்களாம். இரண்டாயிரம் பெண்களுக்குக் கலியாணம் நிச்சயமாயிற்றாம். இந்தச் சந்தை கூடுவது இன்று நேற்று வந்த புதுமை இல்லையாம். கி. பி. 1,326-ம் ஆண்டு மிதிலாபுரியை அரசாண்டு வந்த ஸ்ரீ ஹரிசிங் தேவ் என்ற மன்னரால் 'ஸௌராத் சபா' என்ற இந்த விவாகச் சந்தை ஏற்பட்டதாம். இதிலிருந்து வனங்களும் தோப்புகளும் எவ்வளவு இன்றியமையாதன என்று விளங்குகிறதல்லவா?

தமிழ்நாட்டில் விவாகத்திற்காகப் பெண்களையும் பிள்ளைகளையும் வளர்த்து வைத்திருக்கும் பெற்றோர்கள் ஏன் இப்படி வருடா வருடம் கல்யாண சீஸனின்போது தோப்புக்களிலும் வனங்களிலும் கல்யாணச் சந்தைகளை நடத்தக் கூடாது? இந்தக் கல்யாணச் சந்தைகளை நடத்துவதற்காக ஏன் தோப்புக்களை வைத்து வளர்க்கக் கூடாது?

பிற்காலத்தில் மணமக்களாகக் கூடிய யுவர்களும் யுவதிகளும் கல்யாணச் சந்தை நடப்பதற்கான அழகிய தோப்புக்களை உண்டாக்குவதற்காக இந்த வன மஹோத்ஸவத்தின் பொழுது மரங்களை நடவேண்டுமென்று நானும் மூஷிகனும் உணவு மந்திரி கனம் முன்ஷியின் சார்பாகக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

# பொய்மான் கரடு

கல்கி





ஒரே தொழிலைச் சேர்ந்தவர்கள் நாலு பேர் ஓரிடத்தில் கூடினால் தங்கள் தொழிலைப் பற்றிப் பேசுவது இயற்கையே யாகும். நகைக் கடை வியாபாரிகள் நாலு பேர் ஓரிடத்தில் சேர்ந்தால் தங்கம், வெள்ளி விலைகளைப் பற்றிப் பேசுவார்கள். மளிகைக் கடைக்காரர்கள் துவரம் பருப்பு, மிளகாய் வத்தல் அல்லது மிளகு விலையைப் பற்றிப் பேசுவார்கள். பத்திரிகையாளர்கள் சிலர் ஓரிடத்தில் கூடினால் அந்தந்தப் பத்திரிகைகளின் 'சர்க்குலேஷன்' என்ன, யார் அதிகப் பொய் சொல்லுகிறார்கள் என்பது பற்றி விவாதிப்பார்கள்.

ஹைக்கோர்ட் ஜட்ஜுகள் ஐந்தாறு பேர் சேர்ந்தால் எதைப் பற்றிப் பேசுவார்கள் என்று உங்களால் சொல்ல முடியுமா? சில நாளைக்கு முன்னால் ஒரு 'டீ பார்ட்டி'க்குச் சென்றிருந்தேன். கொஞ்சம் தாமதித்துச் சென்றபடியால் எங்கே உட்காரலா மென்று அங்கு மிங்கும் பார்க்கவேண்டிய தாயிற்று. ஹைக்கோர்ட் ஜட்ஜுகள் சிலர் சேர்ந்திருந்த மூலையிலேதான் ஒரு இடம் காலியாக இருந்தது. அங்கே சென்று உட்காரும்படி நேர்ந்தது.

அவர்கள் என்ன பேசிக்கொண்டிருந்தார்கள், தெரியுமா? 'கொலைக் கேஸு'களைப் பற்றித்தான். கொலை வழக்குகள் எந்தெந்த ஜில்லாக்களில் குறைந்திருக்கின்றன, எந்த ஜில்லாக்களில் அதிகமாகி யிருக்கின்றன என்னும் விஷயத்தைப் பற்றி அபிப்பிராய பரிவர்த்தனை செய்து கொண்டிருந்தார்கள். மதுவிலக்குச் சட்ட அமுலுக்குப் பிறகு திருநெல்வேலி ஜில்லாவில் கொலைக் குற்றங்கள் குறைந்திருக்கின்றன என்று ஒரு ஹைக்கோர்ட் ஜட்ஜு அபிப்பிராயப் பட்டார். அதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. கோயமுத்தூர் ஜில்லாவில் கொலைக் குற்றங்கள் முன்போலவே இருக்கின்றன,—குறையவும் இல்லை, அதிகமாகவும் இல்லை,—என்றார் ஒரு ஹைக்கோர்ட் ஜட்ஜு. அதையும் யாரும் ஆட்சேபிக்கவில்லை.

இன்னொருவர் "சேலம் ஜில்லாவில் கொலைக் குற்றம் அதிகமாகியிருக்கிறது" என்று சொன்னார். "அப்படியா? அது எப்படிச் சாத்தியம்?" என்று ஒருவர் கேட்டார். "எப்படி என்றால், அப்படித்தான்! உண்மை அப்படி யிருக்கிறது" என்று முதலில் பேசிய ஹைக்கோர்ட் ஜட்ஜு கூறினார். இதற்கு அப்பீல் ஏது?

பார்ட்டி முடிந்தது. அவரவர்களும் எழுந்து சென்றார்கள். ஹைக்கோர்ட்

ஜட்ஜுகள் தனித்தனியே பிரிந்ததும் வெவ்வேறு விஷயங்களைப் பற்றிச் சிந்தனை செய்யத் தொடங்கியிருப்பார்கள். ஆனால் சேலம் ஜில்லாவில் கொலை அதிகமாகி யிருக்கிறது என்று ஒரு ஜட்ஜு சொன்ன வார்த்தையை என்னால் மறக்க முடியவில்லை. சில மாதங்களுக்கு முன்பு சேலம் ஜில்லாவுக்கு நான் போயிருந்தேன். அங்கே தற்செயலாக ஒரு கதை கேள்விப்பட்டேன். அந்தக் கதையில் முக்கியமான சம்பவம் ஒரு கொலைதான்! குற்றவாளி யார் என்று கண்டு பிடிக்கப்படாத மர்மமான கொலை! அதன் வரலாறு என் மனதிற்கு வந்து வட்டமிட்டது. அதைச் சுற்றிச் செங்கோடக் கவுண்டன், செம்பவளவல்லி, பங்காருசாமி, சுந்தரராஜன், குமாரி பங்கஜா - முதலியவர்கள் வட்டமிட்டு வந்தார்கள். இதற்கெல்லாம் பின்னணியில் போய் மான் காடு ஒரு பெரிய கரிய பூதம் தன்னுடைய கோரமான பேய் வாயைத் திறந்து கொண்டு நிற்பது போல் நின்று கொண்டே யிருந்தது.

• • •

சேலத்திலிருந்து நாமக்கல்லுக்கு ஒரு சிநேகிதரின் மோட்டார் வண்டியில் போய்க் கொண்டிருந்தேன். காலை நேரம். வானத்தை நாலாபுறமும் மேகங்கள் மூடியிருந்தன.

"இந்த ஜில்லாவில் மழை பெய்து ஆறு மாதம் ஆயிற்று. இன்றைக்குத் தான் மேகம் மூடியிருக்கிறது. மழை பெய்தால் நல்லது. ஒருவேளை மேகம் இன்றைக்கும் ஏமாற்றி விட்டுப் போய் விடுமோ, என்னமோ?" என்று மோட்டார் டிரைவர் கூறினான்.

"இந்த ஜில்லாவில் மட்டும் என்ன? தமிழ்நாடு முழுவதிலுந்தான் மழை இல்லை!" என்றேன்.

"மற்ற ஜில்லாக்களில் மழை இல்லாததற்கும் இந்த ஜில்லாவில் மழை இல்லாததற்கும் வித்தியாசம் உண்டு, ஸார்! இங்கே கிணறுகளில் தண்ணீர் வற்றிவிட்டது. இன்னும் கொஞ்ச நாள் மழை பெய்யாவிட்டால் குடிக்கத் தண்ணீர் கிடைக்காது!" என்றான்.

மேகத்துக்கும் மழைக்கும் மனிதனுடைய வாழ்க்கைக்கும் உள்ள நெருங்கிய சம்பந்தத்தைப் பற்றிச் சிந்தனை செய்யத் தொடங்கினேன். கார் 'விர்' என்று போய்க் கொண்டிருந்தது. சாலையின் இரு புறங்களிலும் சேலம் ஜில்லாவில் சாதாரணமாகத் தென்படும் காட்சிகள்தான். விஸ்தாரமான சமவெளிப் பிரதேசங்கள். இடையிடையே கரிய நிற மொட்டைப் பாறைகள். சோளமும் பருத்தியும் முக்கியமான பயிர்கள். மழையில்லாமையால் சோளப் பயிர்கள் வாடி வதங்கிக் கொண்டிருந்தன.

பாலைவனத்து ஜீவ பூமிகளைப்போல் அபூர்வமாக அங்கங்கே பசுமையான சிறு தோப்புகள் காணப்படும். அந்தத் தோப்புகளுக்கு மத்தியில் ஒரு கேணி இருக்கிறதென்று ஊகித்தறியலாம். ஒவ்வொரு கேணியைச் சுற்றிலும் ஐந்தாறு தென்னை, ஒரு வேம்பு, இரண்டு வாழை, அப்பால் சிறிது தூரம் பசுமையான பயிர், — இவற்றைக் காணலாம். கேணிகளில் கவலை ஏற்றம் போட்டுத் தண்ணீர் இறைத்துக் கொண்டிருப்பார்கள். கேணியில் ஒரு சொட்டு ஜலம் இருக்கும் வரையில் விடாமல் சுரண்டி எடுத்து வயலுக்கு இறைத்து விடுவார்கள்!

இதையெல்லாம் பார்த்துக்கொண்டு, குடியானவர்களின் வாழ்க்கையில் உள்ள இன்ப துன்பங்களைப் பற்றி எண்ணிக்கொண்டு, மணிக்கு முப்பது மைல் வேகத்தில் போய்க் கொண்டிருந்தேன். அரை மணி நேரப் பிரயாணத்திற்குப் பிறகு தூற்றல் போடத் தொடங்கியது. சாலையில் சென்றவர்கள் மழைக்குப் பயந்து ஓடவும் இல்லை; ஒதுங்க இடம் தேடவும் இல்லை. வேகமாய் நடந்தவர்கள் கூடச் சிறிது நின்று வானத்தை அண்ணாந்து பார்த்து மழையின் இன்பத்தை அநுபவித்தார்கள்.

சற்றுத் தூரத்தில் ஆடுகள் ஓட்டிக் கொண்டு போன சிறுவன் ஒருவன் குஷாலாகப் பாட ஆரம்பித்தான்.

தூற்றல் போட்டுக் கொண்டிருக்கும்போதே மேகங்கள் சற்று விலகிச் சூரியன் எட்டிப் பார்த்தது. காலைச் சூரிய கிரணங்களில் மழைத் துளிகள் முத்துத் துளிகளாக மாறின. வானம் அச்சமயம் முத்து மழை பெய்வதாகவே தோன்றியது.

சாலை ஓரத்துக் கிராமம் ஒன்று வந்தது. ஒரு பக்கத்தில் பத்துப் பன்

னிரண்டு குடிசை வீடுகள இருந்தன. ஒரு குடிசையின் வாசலில் போட்டிருந்த கயிற்றுக் கட்டிலில் பெரியவர் ஒருவர் உட்கார்ந்து மழையை அநுபவித்துக் கொண்டிருந்தார். கட்டிலில் விரித்திருந்த ஜமக்காளத்தைக் கூட அவர் சுருட்டவில்லை.

குடிசைகளை யொட்டியிருந்த சில்லறைக் கடை ஒன்றில் ஒரு வாழைப் பழக்குலையும், ஒரு முறுக்கு மாலையும் தொங்கிக் கொண்டிருந்தன. வீதி நாய் ஒன்று முறுக்கு மாலையை எட்டிப்பிடிக்க முயன்று கொண்டிருந்தது. அதைக் கூடக் கவனியாமல் கடைக் காரப் பையன் மழையைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

மோட்டார் வண்டி நின்றது. சாலையின் ஒரு பக்கத்தில் குடிசைகள் இருந்தன என்று சொன்னேனல்லவா? இன்னொரு பக்கத்தில் ஒரு செங்குத்தான கரிய பாறை. அதற்கு முன் புறம் ஒரு அரச மரமும் வேம்பும் பின்னித் தழுவி வளர்ந்திருந்தன. அரசு — வேம்பு மரங்களைச் சுற்றிக் கருங்கல் மேடை எடுத்திருந்தது.

டிரைவர் வண்டியிலிருந்து இறங்கினான். வேறு ஏதோ காரியமாக இறங்குகிறான் என்று நினைத்தேன்.

"ஸார்! கொஞ்சம் கீழே இறங்குங்கள்! உங்களுக்கு ஒரு வேடிக்கை காட்டுகிறேன்!" என்றான்.

வேண்டா வெறுப்புடன் 'இந்த வம்புக்காரனிடம் அகப்பட்டுக்கொண்டோமே?' என்று அலுத்துக்கொண்டு வண்டியிலிருந்து இறங்கினேன்.

"என்ன வேடிக்கை? எங்கே?" என்று கேட்டேன்.

"அதோ பாருங்கள்!" என்று சாலைக்கு ஐம்பது அடி தூரத்தில் செங்குத்தாக உயர்ந்திருந்த கரிய பாறையைக் காட்டினான்.

"என்னத்தைப் பார்க்கிறது? மொட்டைப் பாறையாக நிற்கிறதே! ஒரு மரம் செடி புல் பூண்டு கூடக் காணோமே?" என்றேன்.

"இல்லை, ஸார்! அவசரப் படாமல் நிதானமாய்ப் பாருங்கள்! பாறையில் ஒரு பொந்து மாதிரி இருக்கிறதே! அதற்குள் பாருங்கள்! நீங்கள் கதை எழுதுகிறவர் ஆச்சே! அதற்காகத் தான் பார்க்கச் சொல்லுகிறேன். உங்கள் மாதிரி ஆட்கள் தான் இதைப் பார்க்க வேண்டும்!" என்றான்.

இதைக் கேட்டதும் நானும் அவன் சொல்வதில் ஏதோ இருக்க வேண்டும் என்று கவனமாகப் பார்த்தேன். கரிய பாறையின் இருண்ட பொந்துக்குள் ஏதோ ஒன்று தெரிந்தது.

"தெரிகிறதா? மான் தெரிகிறதா?" என்று டிரைவர் கேட்டான்.

ஆம்; அவன் சொன்ன பிறகு பார்த்தால் அந்தப் பாறையின் பொந்துக் குள்ளேயிருந்து ஒரு மான் எட்டிப் பார்ப்பது நன்றாய்த் தெரிந்தது. ஆனால் அந்த மான் அசையாமல் நகராமல் நின்ற இடத்திலேயே நின்றது.

"ஆமாம்; அந்தப் பொந்தில் மான் நிற்பது தெரிகிறது. உன் பாறையில் அப்படி மான் போல் செதுக்கி வைத்திருக்கிறதா?" என்று கேட்டேன்.

"அதுதான் இல்லை. அருகில் போய்ப் பொந்துக்குள் பார்த்தால் ஒன்றுமே இல்லை. வெறும் இருட்டுத் தான் இருக்கிறது. இங்கிருந்து பார்த்தால் மட்டும் அந்த மாய மான் தெரிகிறது!" என்றான்.

"நீ சொல்வதை என்னால் நம்ப முடியவில்லை. அதோ மான் நிற்பது நன்றாகத் தெரிகிறதே! அங்கிருந்து நம் பேரில் அப்படியே தாவிக்குதிக்கத் தயாராக நிற்கிறதே!" என்றேன்.

"அதுதான், ஸார், வேடிக்கை! அதற்காகத்தான் உங்களை இறங்கிப் பார்க்கச் சொன்னேன். உண்மையில் அந்தப் பொந்துக்குள் ஒன்றுமேயில்லை. இங்கிருந்து பார்த்தால் மான் நிற்பது போலத் தெரிகிறது. இன்றைக்கு நேற்றைக்கு இல்லை. வெகு காலமாக இப்படி இருக்கிறது. அதனாலேதான் இந்தப் பாறைக்குப் 'பொய் மான் கரடு' என்ற பெயரும் வந்திருக்கிறது! உங்களையும் என்னையும் போல் எத்தனை ஆயிரம் பேர் எத்தனை காலமாக இங்கே நின்று அந்தப் பொய் மானைப் பார்த்து ஏமாந்து போயிருக்கிறார்களோ?" என்றான் டிரைவர்.

"நான் ஒன்றும் ஏமாறவில்லை! கட்டாயம் அங்கே ஒரு மான் இருக்கிறது!" என்றேன்.



"உங்களுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை போலிருக்கிறது. வாருங்கள் என்னுடன்!" என்றான்.

அவனைப் பின்பற்றித் தட்டுத் தடுமாறி மலைப் பாறையில் ஏறினேன். குகைக்குச் சமீபத்தில் சென்று எட்டிப் பார்த்தேன். அதற்குள் ஒரு மான், — பாறையில் செதுக்கிய மான், — கட்டாயம் இருக்கும் என்று எண்ணிக் கொண்டு பார்த்தேன். ஆனால் ஏமாந்துதான் போனேன். வெறும் இருட்டைத் தவிர அந்தப் பொந்துக்குள் வேறு ஒன்றுமே இல்லை.

"இப்போது நம்புகிறீர்களா?" என்று டிரைவர் கேட்டான்.

கீழே இறங்கி வந்தோம். சாலையில் நின்று மறுபடியும் பார்த்தேன். பொய்மான் சாக்ஷாத்தாக நின்று எட்டிப் பார்த்து என்னைக் கேலிசெய்தது.

மூண்டும் முரடுமாக நின்ற நெடும் பாறையில் ஏதோ ஒரு பகுதியின் நிழல் அந்தப் பொந்துக்குள் விழுந்து மாயமான் தோற்றத்தை உண்டாக்கிக் கொண்டிருக்க வேண்டும்.

இதற்குள்ளே அந்த ஊரிலுள்ள சின்னப் பசங்கள் எல்லாரும் வந்து எங்கள் வண்டியைச் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். அவர்களை விலக்கி விட்டு டிரைவர் வண்டிக் கதவைத் திறந்தான். நான் ஏறி உட்கார்ந்ததும் வண்டி நகர்ந்தது.

"ஒருவராவது இந்த நாளில் ராமேசுவரம்—காசி போகிறதில்லை. ஆனாலும் ஊருக்கு ஊர் பிள்ளைகள் வச வச என்று பெருகிக் கொண்டே இருக்கிறார்கள்!" என்றான் டிரைவர்.

என்னுடைய ஞாபக மெல்லாம் அந்தப் பொய்மான் பேரிலேயே இருந்தது. அதைப் பற்றி உள்ளூரில் ஏதாவது கதை வழங்கி வரவேண்டும் என்று நினைத்தேன்.

"அந்தப் **பொய்மான் கரடு** ரொம்ப விசித்திரமானதுதான். அதைப்பற்றி ஏதாவது பழைய கதை உண்டா?" என்று கேட்டேன்.

"பழைய கதை ஒன்றும் இல்லை. நான் கேள்விப்படவில்லை. ஆனால் புதிய கதை ஒன்று உண்டு. ஏழெட்டு வருஷத்துக்கு முன்னால் நடந்தது. ஐயாவுக்குக் கேட்க இஷ்டமிருந்தால் சொல்லுகிறேன்!" என்றான்.

இது என்ன வார்த்தை! இஷ்டமிருந்தால் என்ன வந்தது? நான் தான் காதைத் தீட்டிக் கொண்டு காத்திருக்கிறேனே! நடக்கட்டும்! நடக்கட்டும்! காரை மட்டும் எதிரே

வரும் லாரிகளுடன் மோதாமல் ஜாக்கிரதையாக விட்டுக் கொண்டு கதையைச் சொல், கேட்கலாம்! நாமக்கல் போய்ச் சேருவதற்குள்ளே கதை முடிந்துவிடும் அல்லவா? அப்படியானால் சரி, உடனே ஆரம்பி கதையை!

## 2

பொய்மான் கரடுக்குச் சுமார் ஒரு மைல் தூரத்தில் செங்கோடக் கவுண்டனின் காடும் கிணறும் இருந்தன. சேலம் ஜில்லாவில் காடு என்றால், வயல் — நிலம் — பண்ணை என்று அர்த்தம். செங்கோடனுடைய ஐந்து ஏக்கரா நிலம் அவனுக்குத் தியாக வீர மான்யமாகக் கிடைக்கவில்லை. ஆயினும் அவனுடைய பெற்றோர்கள் அந்த நிலத்தைப் பண்படுத்துவதற்கும் கேணி எடுப்பதற்கும் செய்த தியாகங்களின் பலனை இன்றைக்குச் செங்கோடன் அநுபவித்து வந்தான். அவனுடைய ஐந்து ஏக்கரா நிலத்தில் பொன்னும் மணியும் முத்தும் பவளமும் விளையும். இவற்றைக் காட்டிலும் விலை உயர்ந்த பொருள்களான நெல்லும் சோளமும் பருத்தியும் மிளகாயும்கூட விளையும். செங்கோடனுடைய கேணி புதையல் எடுக்கும் கேணி. வருஷம் முழுவதும் அதில் புதையல் எடுத்துக் கொண்டே இருக்கலாம். அப்படி வற்றாமல் தண்ணீர் சுரக்கும் கேணி அது. மூன்று வருஷமாக மழை பெய்யாமல் சுற்று வட்டாரத்துக் கேணிகளில் எல்லாம் தண்ணீர் வற்றி விட்டபோதிலும் செங்கோடன் கேணியில் மட்டும் தண்ணீர் சுரந்து கொண்டேயிருந்தது. செங்கோடனும் தினந்தோறும் ஒரு சொட்டுத் தண்ணீர்கூட வீணாக்காமல் வயல்களுக்கு இறைத்துக் கொண்டிருப்பான். மூன்று போகம் பயிர் செய்து பலன் எடுப்பான்.

செங்கோடன் அநாதை. அவனுடைய தாய் தந்தையர் காலமாகி விட்டனர். அக்கா தங்கை அண்ணன் தம்பி பிச்சுப் பிசிறு ஒன்றும் கிடையாது. வயதான கிழ அத்தை ஒருத்தி சில காலம் அவன் வீட்டில் இருந்து சமைத்துப் போட்டுக் கொண்டிருந்தாள். அவளுக்குச் சோறு போட மனதில்லாமல் செங்கோடன் அவளை அடித்து விரட்டி விட்டான் என்று ஊரில் பேசிக் கொண்டார்கள். ஆனால் உண்மை அப்படியல்ல. அந்த அத்தைக் கிழவி தன் தங்கை மகளைச் செங்கோடன் கழுத்தில் கட்டிவிடப் பிரயத்தனம் செய்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. அதனாலேதான் அவளைத் துரத்தி விட்டான்.

செங்கோடனைக் கலியாண வலையில் சிக்கவைத்து இல்லறத்தில் ஆர்த்தி விட இன்னும் பல முயற்சிகளும் நடந்து கொண்டிருந்தன. அதே ஊரிலும் சுற்று வட்டாரத்திலும் பல பெண்கள் அவனுக்காக மற்றவர்களால் பேசப்பட்டார்கள். ஆனால் செங்கோடன் ஒன்றுக்கும் பிடி கொடுக்கவேயில்லை; யாருடைய வலையிலும் சிக்கவில்லை. கடைசியில் அவன் இந்தக் கலியாணப் பேச்சுத் தொல்லையைப் பொறுக்க முடியாமல் ஒரு காரியம் செய்தான். ஊருக்குள் இருந்த குடிசையைக் காலி செய்து விட்டு அவனுடைய காட்டின் நடுவில் கேணிக் கரையில் ஒரு குடிசை போட்டுக்கொண்டு குடியிருக்கத் தொடங்கினான். இதிலிருந்து செங்கோடனுக்கு மன நிம்மதி ஏற்பட்டது. ஆனால் ஊரில் கெட்ட பெயர் பரவிற்று. அவன் தரித்திரம் பிடித்த கருமி என்றும், பெண்டாட்டி கட்டிக் கொண்டால் அவளுக்குச் சோறு போட வேணுமே என்பதற்காகப் பிரம்மச்சாரி வாழ்க்கை நடத்துகிறான் என்றும் அக்கம் பக்கத்து ஊர் ஜனங்கள் பேசிக்கொண்டார்கள். இது ஒன்றும் செங்கோடன் காதில் விழவில்லை. அவன் உண்டு, அவன் கேணி உண்டு, அவன் விவசாயம் உண்டு என்று வாழ்க்கை நடத்தி வந்தான்.

ஆனாலும் அவனுடைய மன நிம்மதி ஒவ்வொரு சமயம் குலைவதற்குக் காரணமாயிருந்த ஒரு பெண் இருந்தாள். அவள் பெயர் செம்பவளவல்லி. 'செம்பா' என்று கூப்பிடுவார்கள். செம்பா பெரிய குடும்பத்தில் பிறந்தவள். தாய் தகப்பன், பாட்டி, அத்தை, தம்பிமார்கள், தங்கைமார்கள் வீடு நிறைய இருந்தார்கள். செம்பாவின் தகப்பனுக்குக் காடு, கேணி எல்லாம் இருந்தபோதிலும் பெரிய குடும்பம் ஆகையால் ஓயாமல் தரித்திரம் குடி

கொண்டிருக்கும். வயலில் எவ்வளவு விளைந்தாலும் வீட்டில் உள்ளவர்கள் சாப்பிடுவதற்குக் காணாது. வீட்டில் சாப்பாட்டுக்கு ஆட்கள் அதிகமே தவிர, உழைக்கக் கூடியவர்கள் அதிகமில்லை. இப்படிப்பட்ட பெரிய குடும்பத்தில், ஓயாத தரித்திரத்துக்கும் ஒழியாத கூச்சலுக்கும் மத்தியில், செம்பவளம் வாழ்ந்து வளர்ந்து வந்தாள். சேற்றுத் தவளைகளுக்கு மத்தியில் செந்தாமரையைப் போலவும், குப்பைக் கோழிகளுக்கு மத்தியில் தோகை மயிலைப் போலவும், சப்பாத்திக் கள்ளிகளுக்கு மத்தியில் செம்பருத்திச் செடியைப் போலவும் அவள் பிரகாசித்து வந்ததாகச் செங்கோடன் அடிக்கடி எண்ணுவான்.

இவ்வாறு தனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டிருந்த செம்பாவைக் கலியாணம் செய்து கொள்வது பற்றியும் அவன் அடிக்கடி யோசனை செய்யாமல் இல்லை. அவன் மனதில் தானாக அந்த யோசனை உதித்திரா விட்டாலும், செம்பாவின் பெற்றோர்களும் உற்றார் உறவினரும் அவனைச் சும்மாவிட வில்லை. செங்கோடனை அவர்களில் யாராவது சந்திக்க நேர்ந்தபோதெல்லாம் "ஏண்டா, அய்யாக் கவுண்டன் மகனே! எங்கள் செம்பவளவல்லியை நீ கட்டிக் கொள்ளப் போகிறாயா, இல்லையா? இரண்டில் ஒன்று கறாராகச் சொல்லிவிடு! எத்தனை நாள் அவளைக் கன்னி கழியாமல் உனக்காக வைத்திருப்பது? நீ இல்லாவிட்டால் இன்னும் எத்தனையோ பேர்! கண்டேன் கண்டேன் என்று கொத்திக் கொண்டு போய்விடக் காத்திருக்கிறார்கள்!" என்று பச்சையாகக் கேட்டு விடுவார்கள். ஆனால் செங்கோடன் அதற்கெல்லாம் கொஞ்சமும் அசைந்து கொடுப்பதில்லை. "அப்படி மேலே விழுந்து யாராவது பெண் கேட்க வந்தால் கட்டிக் கொடுத்து அனுப்புங்களேன்! நானா குறுக்கே விழுந்து மறிக்கிறேன்?" என்று பிடி கொடாமல் பதில் சொல்லுவான்.

எல்லாரும் சேர்ந்து சூழ்ச்சி செய்து செம்பாவைத் தன் கழுத்தில் கட்டி விடப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற பீதி செங்கோடன் மனதில் குடிகொண்டிருந்தது. செம்பாவைக் கட்டிக் கொள்வதில் அவனுக்கு ஆசையில்லாமல் இல்லை. பகலில் கேணியிலிருந்து தண்ணீர் இறைக்கும்போதும் சரி, காட்டில் மண் வெட்டி பிடித்து வேலை செய்யும் போதும் சரி, இரவில் தூக்கத்தில் கனவிலும் சரி, செம்பாவின் முகமும் புன்சிரிப்பும் கண் சுழட்டலும் அவன் மனதில் அடிக்கடி வந்து கொண்டிருக்கும். குடிசைக்குள் அடுப்பு மூட்டி உலைப் பானையைப் போடும்போதெல்லாம் "வீட்டில் ஒரு பெண்பிள்ளை இருந்தால் எவ்வளவு சல்சாக இருக்கும்! இந்த அடுப்பு மூட்டும் வேலையெல்லாம் நாம் செய்ய வேண்டியதில்லையல்லவா?" என்று தோன்றும். ஆனாலும், கலியாணம் என்று செய்து கொண்டால் செம்பாவின் குடும்பத்தார் அனைவரும் தன் வீட்டில் வந்து உட்கார்ந்து அட்டூழியம் செய்ய ஆரம்பித்து விடுவார்கள் என்றும், நாலைந்து வருஷமாகத் தான் அரும்பாடு பட்டு இராப்பகலாக உழைத்துச் சேர்த்து வைத்திருக்கும் பணத்தைப் பரிசம் என்றும், சேலை என்றும், கலியாண விருந்து என்றும் சொல்லிச் சூறையிட்டு விடுவார்கள் என்றும் அவன் மனதில் பெரும்பீதி குடி கொண்டிருந்தது. செம்பாவின் பேரில் அவனுக்குள்ள ஆசையும், சேர்த்துப் புதைத்து வைத்திருந்த பணத்தின் மேல் அவனுக்கிருந்த ஆசையும் ஒன்றோடொன்று போட்டியிட்டுக் கொண்டிருந்தன. இரண்டையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்று அவன் விரும்பினான். ஆனால் ஏதாவது ஒன்றைக் கைவிட்டுத்தான் ஆக வேண்டும் என்று ஏற்பட்டு விட்டால் என்ன செய்வது என்று தயங்கினான். சில சமயம் "செம்பாவைப் போல் நூறு பெண்கள் கிடைப்பார்கள். ஆனால் வெள்ளி ரூபாய் எண்ணூறு இலேசில் கிடைக்குமா? நாலு வருஷம் பாடு பட்டால் அல்லவா கிடைக்கும்?" என்று தோன்றும். "பணமாவது பணம்! பணம் இன்றைக்கு இருக்கும்; நாளைக்குப் போகும். ஆனால் செம்பாவைப் போல் ஒரு பெண் ஆயிரம் வருஷம் தபஸு செய்தாலும் கிடைப்பாளா?" என்று இன்னொரு சமயம் அவனுக்குத் தோன்றும். இந்த இரண்டுவித எண்ணங்களுக்கு

பிடையே நிச்சயமான ஒரு முடிவுக்கு வர முடியாமல் செங்கோடன் திகைத்தான்; திணறினன்; திண்டாடினன்.

இப்படி இருக்கும் போது ஒரு நாள் காலையில் செங்கோடன் கேணியிலிருந்து தண்ணீர் இறைத்து விட்டு, மாட்டைக் கவலை ஏற்றத்திலிருந்து அவிழ்த்து விட்டு விட்டு, கிணற்றங்கரையில் மரத்து நிழலில் இளைப்பாற உட்கார்ந்தான். அப்போது அவன் மனம் தன்னை அறியாமல் செம்பாவின் மேல் சென்றது. பணச் செலவைப் பாராமல் செம்பாவைக் கட்டிப் போட்டு வைத்திருந்தால் இச்சமயம் கஞ்சியோ, கூழோ, அல்லது நீராகாரமோ கொண்டு வருவாள் அல்லவா என்று நினைத்தான். அதே சமயத்தில் ஏதோ பின்னல் சல சல வென்று சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அங்கே இடுப்பில் சோற்றுக் கூடையுடன் செம்பா நின்றாள்!

மனதில் எவ்வளவு வியப்பும் மகிழ்ச்சியும் இருந்தாலும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், "ஓகோ அப்படியா? நீ தானு? யாரோ என்று பார்த்தேன்" என்றான் செங்கோடன்.

"என்னைப் பார்ப்பதற்குப் பிடிக்கவில்லையாக்கும். நான் வந்தது பிசகு தான்!" என்றாள் செம்பா.

"யார் சொன்னது பிடிக்கவில்லை என்று? வா வா! வந்துவிடு! இங்கே வந்து என் பக்கத்தில் உட்காரு!" என்றான் செங்கோடன்.

"இல்லை, நான் போகிறேன்!" என்று அரை மனதுடன் செம்பா திரும்பிப் போகப் பார்த்தாள்.

செங்கோடன் எழுந்து ஓடிச்சென்று அவளை வழி மறித்து நின்று, "வா! வா! வந்து விட்டுக் கோபித்துக் கொண்டு போகலாமா?" என்று சொல்லி, அவள் கையைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து தன் பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டான்.

சிறிது நேரம் அவர்கள் சும்மா இருந்தார்கள். உச்சஸ்தாயியில் முறை வைத்துப் பாடிய இரண்டு குயில்களின் குரல் கேட்டது. அணிப்பிள்ளைகள் 'கிளிக்' 'கிளிக்' என்று சப்தித்தன. குருவி ஒன்று 'கிவ்' என்று பறந்து சென்றது.

"செம்பா! எங்கே இப்படி வந்தாய்? ஏதாவது காரியம் உண்டா?" என்றான் செங்கோடன்.

"ஒரு காரியமும் இல்லை; சும்மா உன்னைப் பார்க்கத்தான் வந்தேன்."

"காரியமில்லாமல் வெறுமனே பார்ப்பதற்கு வருவார்களா?"

"ஏன் வரமாட்டார்கள்? கவுண்டா! போன சனிக்கிழமை சின்னம நாயக்கன் பட்டிக்கு ஸினிமா பார்ப்பதற்காகப் போயிருந்தோம். அதிலே மோகனுங்கி என்று ஒருத்தி வருகிறாள். அவள் தன் புருஷனுக்காக என்னென்ன கஷ்டமெல்லாம் படுகிறாள், தெரியுமா? அதைப் பார்த்துவிட்டு அழாதவர்கள் கிடையாது!"

"ஓஹோ! ஸினிமா பார்க்கப் போயிருந்தீர்களா? ஏதோ கூடார ஸினிமா வந்திருக்கிறது என்று சொன்னார்களே? அதற்கா போனீர்கள்? யார் யார் போயிருந்தீர்கள்?"

"அப்பா, அம்மா, தங்கச்சி, தம்பி, — எல்லாருமாகத்தான் போயிருந்தோம். தலைக்கு இரண்டே காலணு டிக்கெட். மொத்தம் ஒரு ரூபாயும் மூன்று அணுவும் செலவு. 'போனால் போவட்டும்; இந்தமாதிரி அதிசயக் காட்சிகளை எங்கே பார்க்கப் போகிறோம்? ஆயிரம் ரூபாய் கொடுத்தாலும் பார்க்க முடியுமா?' என்று அப்பா சொன்னார். நிஜமாக, எவ்வளவு நன்றாயிருந்தது, தெரியுமா? நீகூடப் போய்ப் பார்த்து விட்டு வா!" என்றாள் செம்பவளம்.

"உங்களுக்கென்ன? கொழுத்த பணக்காரர்கள்! இஷ்டப்படி செலவு செய்கிறீர்கள்! நான் எங்கே போக அம்மட்டுப் பணத்துக்கு?" என்றான் செங்கோடன்.

நமது சென்னை முதன் மந்திரி கனம் குமாரஸ்வாமி ராஜாவும் நமது கதா நாயகன் செங்கோடக் கவுண்டனும் ஸினிமா விஷயத்தில் ஒன்றுபட்டவர்கள். இரண்டு பேரும் ஸினிமாப் பார்த்தது கிடையாது!

ஊர் உருப்படாமல் போய்க்கொண்டிருப்பதற்கும் காலா காலத்தில் மழை பெய்யாமல் தேசம் நாசமாய்ப்போய்க் கொண்டிருப்பதற்கும் ஸினிமாதான் காரணம் என்பது செங்கோடனுடைய சித்தாந்தம். (தொடரும்)

# ராமகிருஷ்ண உபநிஷதம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## 15. அத்துவைதம்

“அத்துவைதத்தைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன? பிரம்மம் ஒன்றே உண்மை; பிரபஞ்சம் அவ்வளவும் பொய்—இதுதானே வேதாந்த முடிவு?” என்று அத்துவைத சாஸ்திரம் படித்த ஒரு பெரிய பண்டிதர் பரமஹம்ஸரைக் கேட்டார். இந்தச் சந்தர்ப்பத்தில் பகவான் ராமகிருஷ்ணர் செய்த உபதேசம்:

**எ**ல்லாம் பொய், எல்லாம் மாயை, பரம் பொருள் ஒன்றே உண்மை என்று வாதித்து நிரூபிப்பது எளிது. ஆனால் பேச்சில் நிரூபித்து விட்டதனால் அது நமக்கு மெய்யுணர்வாக முடிந்தது என்று சொல்லுவதற்கில்லை. மெய்யுணர்வாகாத அறிவுக்கும் உண்மையான ஞானத்துக்கும் ரொம்பவும் வித்தியாசம் உண்டு. கானல் நீர் என்று கண்ட பிறகு குடம் எடுத்துக் கொண்டு தண்ணீர் மொள்ளப் போகமாட்டோம். யாராவது போகச் சொன்னால் சிரிப்போம். காண்பது பேய்த் தேர், தண்ணீர் இல்லை என்று தெரிந்த பின் தென்பட்ட பொருளைப் பற்றி நாம் அறிந்து கொண்ட உண்மையை உணர்ந்து அதன்படி நடந்து கொள்ளுகிறோம். கானல் நீரைப் பற்றி நாம் அடைந்த அறிவும் நம்முடைய செயலும் எளிதில் ஒன்று பட்டு விடுகின்றன.

அத்துவைத உண்மை விஷயத்தில் இப்படியில்லை. ‘பரம் பொருள் ஒன்றே உண்மை, ஜீவன்களுடைய வியக்தி நிலையும் பிரபஞ்சத்தில் காணப்படும் சகல பொருள் வேறுபாடுகளும் மாயை’ என்று மீமாம்ச ஆராய்ச்சியைக் கொண்டு உறுதியாக முடிவு செய்தாலுங் கூட நம்முடைய உள்ளுணர்ச்சியில் அந்த முடிவு சரியான இடம் பெற்றுப் பதிவதில்லை. கண்ட உண்மையானது உயிரோடு ஒட்டாமல் தனித்து நிற்கிறது. உணர்ச்சி என்னும் கெட்டிச் சாந்தில் பதியவில்லை. படித்தும் வாதித்தும் முடித்த முடிவு பொதி மாட்டுச் சுமையாக நிற்கிறதே யொழிய உள்ளுணர்ச்சி யாகவில்லை. மாயை என்று சண்டை போட்டு வாதித்த அறிஞர்களாகிய நாம் மறுநாள் சாப்பாட்டைப் பற்றிக் கவலைப்பட்டு அலைகிறோம். நம்முடைய முயற்சிகள் எதிலாவது யாரேனும் தடையாக நின்றால் அவர் மேரில் கோபங் கொள்கிறோம். அடைந்த அறிவு வாழ்க்கையில் ஏறுவதில்லை. அத்துவைதம் எளிதல்ல. பக்தி வழிபாட்டின் அவசியம் இதுவே.

ஒரு பாம்பையோ புலியையோ கண்டோமானால் உடல் நடுங்குகிறது. புலன் வழியாக அடைந்த அறிவு உடலை யெல்லாம் ஆட்டி விடுகிறது. நல்ல ஆகாரத்தைப் பசி வேளையில் ஒருவன் கண்டால் அவன் வாயில் தண்ணீர் ஊறுகிறது. ஆகார உண்மையானது உயிரோடும் உடலோடும் ஒட்டி வேலை செய்கிறது.

சிநேகிதனையோ அன்புக்குரிய உறவினரையோ கண்டால் ‘ஆம், இவர் இன்னார்’ என்று தெரிந்து கொண்டு நாம் சும்மா நிற்பதில்லை; உள்ளம் பூரித்து மகிழ்ச்சி யடைகிறோம்.

படத்திலுள்ள பாம்பையோ புலியையோ கண்டதுபோல் மட்டும் ஒருவன் அத்துவைத உண்மையை அறிவாராய்ச்சியால் கண்டு விட்டதால் பயன் ஒன்றுமில்லை.

ஒருவன் அத்துவைத ஞானம் உண்மையில் அடைந்தால் அந்தச் சமயமே அவன் மெய்ப் பொருளுடன் ஒன்றுபட்ட நிலையை அடைய வேண்டுமல்லவா? காட்டில் நிஜப் புலியைக் கண்டவுடன் பயங்கொண்டு நடுங்குவதுபோல் உண்மை ஞானம் அடைந்தவன் தட்சணமே ஆனந்தம் மேலிட்டுச் சமாதி நிலையை அடைவான்.

• • •

**பி**ரம்மம் ஒன்றே உண்டு; மற்றவையெல்லாம் மாயை என்று ஒருவன் உண்மையில் கண்டால் பேத உணர்ச்சிக்கு இடம் ஏது? பேத உணர்ச்சி

நீங்காமலிருந்தால் அடைந்த அறிவு பேச்சளவுதான்; ஞானானுபவம் அல்ல.

அத்துவைத மெய்யுணர்வைப் பெற்றால் எரியும் கற்பூரம் எரிந்து ஒன்றுமில்லாமல் போவதுபோல் அறியாமையான பேத உணர்ச்சி முற்றிலும் அற்றுப் போகும். துளிச் சாம்பலும் இராது. கற்பூரம் எரிந்து போன பின் 'நான் எரிந்து ஒழிந்தேன்' என்று சொல்லுவதற்குக் கற்பூரம் இருந்தால்தானே? ஆனந்த நிலையை அடைந்திருக்கும் ஒருவன் மாயையை மாயையாகவும் உண்மையை உண்மையாகவும் அனுபவிக்கிறான். ஆனால் அந்த நிலையில் நீ, அது, இது, அறிவு, அறியாமை, உண்மை, இன்மை என்கிற பேச்சுக்கே இடமில்லை. கரையற்ற மௌன வெள்ளத்தோடு அவன் உயிர் சேர்ந்து விடுகிறது. உப்பால் செய்யப்பட்ட ஒரு பிரதிமையைத் தண்ணீரில் போட்டால் கரைந்து போவதுபோல் அத்துவைத மெய்ஞானமடைந்தவனுடைய உள்ளம் பரம் பொருள் வெள்ளத்தில் கரைந்து ஒன்றாகிவிடும். கரைந்து போனதைப் பற்றிக் கரைந்து போன உப்பு பேச முடியுமா? "அறிந்தேன்" "அறியவில்லை" என்று யாரேனும் வாதிக்கும்போது நான், நீ என்கிற பேத உணர்ச்சியுடன்தான் பேச்சு நடக்கிறது. அந்த நான்-தன்மை இருக்கும் வரையில் அவனுக்குப் பிரபஞ்சம் எப்படி மாயையாகும்? பேத உணர்ச்சி நீத்த பின்னர் வாதப் பிரதிவாதமே இல்லை. மௌன நிலை.

இதுவே அத்துவைதத்தை உபதேசிப்பதில் உள்ள சிக்கல்; அறிவுக் கெட்டாத மெய்ப்பொருளை மாயையால் உண்டான நிலையில் வாதித்து விளக்கிப் பார்ப்பதிலுள்ள சஷ்டம். உபதேசமும் வாதமும் நடத்தும் ஆசாரியனுக்கும் கேட்கும் சீடனுக்கும் 'நீ' 'நான்' என்கிற பேத உணர்ச்சி இருந்தே தீருகிறது. இருவருக்கும் உலகம் உண்மையில் மெய்யாகவே இருக்கிறது. சமாதி நிலை ஒன்றில்தான் அத்துவைதத்தை ஒருவன் அனுபவித்து உணரலாம். மற்ற நிலையில் பேசப்படும் அத்துவைதம் வெறும் காற்று மூட்டை; அதைக் கொண்டு ஓரளவு நீந்தலாம். அடைந்த அறிவைக் கொண்டு பக்தி செய்து ஆண்டவனை வழிபட்டால் மெய்யுணர்வு அடையலாம்.



# அதிசயப் பிரயாணம்

ஸோமாஸ்

## 6. மீண்டும் ஆபத்து

மூன்றாவது நாள் காலையில் ராணியினிடமிருந்து ஒரு பணிப்பெண் முத்து இருந்த இடத்துக்கு வந்தாள்.

மிகவும் பணிவாக அவனுக்கு எதிரில் வந்து நின்று "மகாராணி உன்னைச் சபா மண்டபத்துக்கு வரும்படி அழைத்தார்கள்!" என்று சொன்னாள் அந்தப் பணிப்பெண்.

முத்து உடனே அவளைப் பின்பற்றிச் சபா மண்டபத்துக்குப் போனான்.

முத்துவைக் கண்டதும் ராணியின் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

"முத்து, இன்று மத்தியானம் சாப்பாடு முடிந்ததும் பல்லக்கில் உன்னை அனுப்பி வைக்கிறேன். இரண்டு மூன்று நாட்களுக்கு மேல் காட்டு வழியில் பிரயாணம் செய்தால் நீ பாலா இருக்கும் ஊருக்குப் போய்ச் சேரலாம். இரவு நேரங்களில் வழியில் தங்கிக் களைப்பாறிவிட்டுப் போகலாம். சாப்பாடு பல்லக்கிலேயே தயாராயிருக்கும். இந்த ஜாலக் கண்ணாடியின் உதவியால் உனக்கு வழி சுலபமாகத் தெரியும். கிளி உன்னோடு கூட வரும்! நீ பாலாவை அழைத்துக்கொண்டு திரும்பி வரும்போது இந்த அரண்மனையில் தங்கி விருந்து சாப்பிட்டுவிட்டுப் போக வேண்டும்" என்று சொல்லி ராணி அந்த ஜாலக் கண்ணாடியை முத்துவினிடம் கொடுத்தாள்.

முத்துவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஜாலக் கண்ணாடியை வாங்கிப் பத்திரமாக வைத்துக் கொண்டான்.

இந்த அரிய உதவியைச் செய்யும் ராணிக்கு எப்படித் தன் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுவது என்றே அவனுக்குத் தோன்றவில்லை. பேச நாக்கு எழுந்தால் தானே அவன் ஏதாவது பேசுவான்? கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக இரண்டு கைகளையும் கூப்பி வன ராணியை வணங்கி விட்டு முத்து சபா மண்டபத்தை விட்டுப் புறப்பட்டான்.

அன்று மத்தியானம் முத்துவும் கிளியும் பல்லக்கில் ஏறிக் கொண்டு புறப்பட்டனர். பல்லக்கு மிகவும் அழகாக அலங்காரம் செய்யப்பட்டிருந்தது. முத்து மிகவும் சின்னப் பையனாக இருந்ததனால் பல்லக்குத் தூக்குபவர்களுக்கு ஒரு சிரமமும் இருக்கவில்லை. அன்று சாயங்காலத்துக்குள் பல்லக்கு காட்டு மார்க்கமாக வெகு தூரம் போய்விட்டது.

வரவர இருட்ட ஆரம்பித்தது. வன ராணி சொன்னபடியே இராத்திரி மணி பத்துக்கு மேல் ஒரு ஊரில் தங்குவது என்று பல்லக்கு தூக்குபவர்கள் தீர்மானித்திருந்தார்கள்.

சூரிய அஸ்தமனம் ஆகிச் சில மணி நேரங்களுக்குப் பிறகு வான வீதியில் சந்திரன் பவனி வர ஆரம்பித்தான். பால் போன்ற குளிர்ந்த நிலவைப் பொழிந்து அந்தக் காட்டு வழியை பயமற்றதாகச் செய்தான் சந்திரன்.



பல்லக்குத் தூக்குபவர்களுக்கு ஒரே உற்சாகம். ஆனந்தமாகப் பாட்டுப் பாடிக் கொண்டு பல்லக்கைத் தூக்கிக் கொண்டு போனார்கள்.

இரவு மணி பத்துக்குமேல் இருக்கும். பல்லக்குத் தூக்குபவர்கள் போடும் 'ஹா, ஹூ' என்ற சத்தத்தையும் மரங்களின் மேல் காற்று வீசும்போது உண்டாகும், 'சோ' என்ற

சத்தத்தையும் தவிர அந்தக் காட்டு வழியில் வேறு சத்தமே கிடையாது.

அந்த மனித சஞ்சாரமற்ற வனப் பிரதேசத்தில் பல்லக்குத் தூக்குபவர்கள் ரொம்ப வேகமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று "நிறுத்து! நிறுத்து! பல்லக்கை நிறுத்து!" என்று பயங்கரமான குரல்கள் ஏக காலத்தில் நாலாபுறத்தி லிருந்தும் கேட்டன.

பல்லக்கில் உட்கார்ந்திருந்த முத்து நடுங்கிப் போய் விட்டான்.

கையில் தீவட்டியுடன் பல திருடர்கள் பல்லக்கை ஒரு விநாடியில் சூழ்ந்து கொண்டனர். பல்லக்கு தூக்குபவர்களால் ஆயுதந் தாங்கிய திருடர்களை ஒன்றும் செய்ய முடியவில்லை. திருடர்கள் பல்லக்கு தூக்குபவன் ஒவ்வொருவனுக்கும் ஒரு அறை கொடுத்துக் கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டுப் பல்லக்கைத் தாங்களே தூக்கிக் கொண்டு வேகமாகப் புறப்பட்டனர்.

பல்லக்கில் இருந்த முத்து பயத்தினால் கண்களைக் கெட்டியாக மூடிக் கொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தான். அவன் மூச்சுக் கூடக் கெட்டியாக விடவில்லை. கிளி கீச்சுக் கீச்சு என்று தன்னால் ஆனமட்டும் கத்திப் பார்த்தது. அதை யாரும் லட்சியம் செய்யவே இல்லை.

சற்று நேரத்துக்கெல்லாம் அமைதி ஏற்பட்டது. பல்லக்கு முன் போலவே ஆடி அசைந்து கொண்டு போக ஆரம்பித்தது. 'சரிதான். பல்லக்குக் காரர்கள் திருடர்களைத் துரத்தி விட்டார்கள். அதனாலேதான் பல்லக்கு மறுபடியும் போகிறது' என்று நினைத்தான் முத்து.

ஆனால் சில நிமிஷங்களுக்கெல்லாம் அந்த அபிப்பிராயம் தவறு என்பது முத்துவுக்குத் தெரிந்து விட்டது.

போய்க்கொண்டேயிருந்த பல்லக்கு சட்டென்று நின்றது. பிறகு பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. பல்லக்குத் திரையை அகற்றி உள்ளே ஒருவன் முத்துவைத் தீவட்டி வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தான்.

அதே சமயத்தில் முத்துவும் அவனைப் பார்த்தான். அப்பப்பா! அவன் முகத்தில் தான் என்ன பயங்கரம்!



மீசையும் கிருதாவுமாகக் காட்சியளித்த அவனைப் பார்த்தால் முத்துவுக்குத் திருடன் ஞாபகம் வந்தது. முத்து மாமாவோடு ஒரு தடவை சதாரம் நாடகத்துக்குப் போயிருந்தான். அந்த நாடகத்தில் திருடனைப் பார்த்திருக்கிறான். அதே மாதிரிதான் இந்த ஆசாமியும் இருந்தான்.

'ஹோ' வென்று கத்திவிட வேண்டும் போல் முத்துவுக்குத் தோன்றியது. ஆனால் குரல் தான் எழும்பவில்லை. தொண்டையை ஏதோ அடைத்துக் கொண்டிருப்பது போல் அவனுக்குத் தோன்றியது.

முத்து பயந்து நடுங்குவதைக் கண்ட திருடன், "தம்பி, நீ யார்? உன் பெயர் என்ன? நீ எங்கே போகிறாய்? பயப்படாமல் உண்மையைச் சொல்!" என்று தன் இரும்புத் தொண்டையில் கேட்டான்.

"என் பெயர்...முத்து...! நான்...!" அதற்கு மேல் முத்துவால் பேச முடியவில்லை. பயத்தினால் அவன் உடம்பு நடுங்கியது.

"முத்து, நீ பயப்படாதே. பல்லக்கில் ராணிதான் போகிறாள் என்று நினைத்து நாங்கள் பல்லக்கை மடக்கினோம். நாங்கள் அதிர்ஷ்டசாலி. நீ கிடைத்தாயல்லவா? எனக்கும் பிள்ளைக் குழந்தை இல்லை. நீ என்னோடு வீட்டுக்கு வந்து ராஜா மாதிரி ஆனந்தமாக இரு. உன்னோடு விளையாட ஒரு சின்னத் தங்கச்சி வீட்டில் இருக்கிறாள்!" என்று சொல்லி விட்டு, திருடன் மற்றவர்களைப் பார்த்துப் பல்லக்கைத் தூக்கும்படியாகக் கட்டளையிட்டான்.

உடனே பல்லக்கு மெதுவாக நகர ஆரம்பித்தது.

முத்து பயத்தினல் நடுங்கியபடி ஒன்றும் தோன்ருமல் பல்லக்கில் உட்கார்ந்து கொண்டு போனுன்.

பல்லக்கை விட்டு முத்து கீழே இறங்கியபோது, பொழுது விடிந்திருந்தது. கிழக்குத் திசையில் சூரியன் உதயமாகிக்கொண்டிருந்தான். முத்து இறங்கிய இடத்தில் ஒரு அழகிய பங்களா இருந்தது. அவன் யாருக்கும் தெரியாமல் ராணி கொடுத்த ஜாலக் கண்ணுடியைத் தன் நிஜார்ப் பையில் மறைவாக வைத்துக் கொண்டு அந்த பங்களாவுக்குள்ளே நுழைந்தான்.

திருடன் மிகவும் அன்போடு அவனை அழைத்துச் சென்று தன் மனைவியிடம் ஒப்புவித்தான். திருடன் மனைவி முத்துவைப் பிரியத்தோடு கையைப் பிடித்து அழைத்துச் சென்ருள். கிளியைப் பிடித்து ஒரு கூண்டில் அடைத்தான்.

திருடன் வீடு பிரமாதமாயிருந்தது. மஹா ராஜாக்கள் அணியும் கிரீடங்களும் மஹாராணிகள் அணியும் விலையுயர்ந்த பட்டாடைகளும் ஏராளமாக இருந்தன. இன்னும் தங்கக் கட்டிகளும் வெள்ளிக் கட்டிகளும் அங்கே போராகக் குவிந்திருந்தன.

அதையெல்லாம் முத்துவினல் பார்த்து ரஸிக்கவே முடியவில்லை. எந்தப் பொருளைப் பார்த்தாலும் அதில் எல்லாம் பாலாவின் உருவம் தெரிந்தது. அவன் மனசுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது.

திருடனின் பெண் கமலா முத்துவிடம் மிகவும் பிரியமாயிருந்தாள். முத்து அவளோடு சாப்பிட்டு விட்டு அன்று இரவு கொஞ்சம் நிம்மதியாகத் தூங்கினுன்.

மறுநாள் பொழுது விடிந்ததும் முத்துவுக்குத் திருடன் மனைவி நல்ல பிஸ்கோத்துகளும் பாலும் கொடுத்தாள். முத்து அவைகளை யெல்லாம் மனமில்லாமல் சாப்பிட்டு விட்டு அந்த வீட்டுத் தோட்டத்துப் பக்கம் போய் ஒரு பெரிய வேப்ப மரத்து அடியில் உட்கார்ந்து பாலாவை எப்படிக் கண்டு பிடிப்பது என்ற யோசனையில் ஆழ்ந்திருந்தான். மெதுவாக நாலாபுறமும் பார்த்து விட்டு நிஜார்ப் பையிலிருந்து ஜாலக் கண்ணுடியை எடுத்துப் பார்த்தான்.

ஆகா! அதில் பாலாவின் உருவம் அப்படியேதெரிந்தது. அவள் பனிமதி ராணியின் அரண்மனையில், வெள்ளை ரோஜாத் தோட்டத்தில், சலவைக்கல் மேடையில் உட்கார்ந்திருந்தாள். பாலாவுக்கு முத்துவின் ஞாபகம் இருப்பதாகவே தெரியவில்லை. முன்னைவிட பாலா இப்பொழுது மிகவும் அழகாயிருந்தாள்; முத்து பாலாவைப் பிரிந்து எத்தனையோ நாட்கள் ஆகிவிட்டனவே! முத்துவின் பெற்ருேர்களும் பாலாவின் பெற்ருேர்களும் குழந்தைகள் இருவரையும் காணுமல் எவ்வளவு வருத்தப்படுவார்கள்!

இதையெல்லாம் முத்து தன் மனத்தில் நினைத்துப் பார்த்த



இந்தப் படத்துக்குள் சில பிராணிகள் ஒளிந்து கொண்டிருக்கின்றன. அவை இருக்கும் இடத்தைக் கண்டு பிடியுங்கள்.

போது அவனுக்குத் தூக்கமாயிருந்தது. அந்த ஜாலக் கண்ணாடியில் தெரியும் பாலாவைப் பார்த்து "பாலா, பாலா!" என்று கூப்பிட்டுக் கதறி அழுது விட்டான்.

முத்து வேப்ப மரத்து அடியில் உட்கார்ந்து ஜாலக் கண்ணாடியைப் பார்த்துக்கொண்டு தனக்குத்தானே பேசிக் கொண்டு அழுவதை, இத்தனை நேரம் வரையில் மரத்துக்குப் பின்னாலிருந்து கமலா பார்த்துக் கொண்டிருந்தாள்.




இதோ, இந்தக் கட்டத்துக்குள் இருக்கும் சதுரத்தின் நான்கு பக்கங்களில் எந்தப் பக்கம் பெரியது என்பதைச் சொல்ல முடியுமா உங்களால்? அளந்து பார்க்கக் கூடாது! கண்ணால் பார்த்துச் சொல்ல வேண்டும்.

சற்று நேரத்துக்கெல்லாம் அவள் வெளியே வந்து "முத்து, ஏன் அழுகிறாய்? கண்ணாடியைப் பார்த்து அழுகிறாயே! என்னிடம் சொல்ல மாட்டாயா?" என்று கேட்டுக் கொண்டே அவன் பக்கத்தில் வந்து ஜாலக் கண்ணாடியை வாங்கிப் பார்த்தாள்.

கமலாவுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"முத்து, முத்து! இந்தப் பெண் யார்? எவ்வளவு அழகாயிருக்கிறாள்!" என்று அதிசயத்தோடு கத்தினாள் கமலா.

முத்து அவளிடம் தானும் பாலாவும் சைக்கிளை எடுத்துக்கொண்டு வீட்டிலிருந்து புறப்பட்டது முதல் அன்று வரையில் நடந்த சம்பவங்களையெல்லாம் விவரமாகச் சொன்னான். அதையெல்லாம் கேட்ட கமலாவின் கண்களில் கண்ணீர் ததும்பி விட்டது.

"முத்து, நீ கவலைப்படாதே. ஜாலக் கண்ணாடியில் பார்த்ததில் உன் சினேகிதி பாலா சௌக்கியமாயிருக்கிறாள் என்று தெரிகிறது. எப்படியும் நாம் அவளைக் கண்டு பிடித்து விடலாம்!" என்றாள் கமலா. (தொடரும்)

# அழுகைக்குக் காரணம்

ராமனுக்கு வயது ஆறு இருக்கும். அவன் தம்பி கோபுவுக்கு வயது நாலு இருக்கும். இரண்டு பேருக்கும் எப்போதும் சண்டையாகத்தான் இருக்கும்.

ஒருநாள் இருவரும் திண்ணையில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தாயார் சமையலறையில் ஏதோ வேலையாக இருந்தாள். தந்தை சுந்தரம் பிள்ளை பத்திரிகை படிப்பதில் மூழ்கியிருந்தார்.

திடீரென்று திண்ணையில் அழுகைச் சத்தம் கேட்டது. "ஐயோ, அப்பா!" என்ற கூக்குரலும் அதைத் தொடர்ந்து வந்தது. சுந்தரம் பிள்ளைக்குக் கோபம் மூக்குக்கு மேல் வந்தது. "சனியன்கள்! கொஞ்ச நேரமாவது அமைதியாகப் படிக்க விடுகிறதா?" என்று சொல்லிக் கொண்டே வெளியே வந்தார்.

அழுதவன் அண்ணன் ராமுதான். தம்பி கோபு அவன் கையைப் பிடித்துத் தடவிக் கொடுத்துக் கொண்டும் ஊதிக் கொண்டும் இருந்தான். 'த்ஸௌ' 'த்ஸௌ' 'வேண்டாம்! அழாதே!' என்றெல்லாம் ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தான்.

"அண்ணன் ஏன் அழுகிறான்! நீ ஏதாவது பண்ணிவிட்டாயா?" என்று கோபுவைக் கேட்டார்.

"நான் ஒன்றும் செய்யவில்லை, அப்பா! அவன் கையில் பலமாக அடிபட்டுவிட்டது! ரொம்ப வலிக்கிறதாம்!" என்றான் கோபு.

ராமு மேலும் பலமாக அழுதான்.

"எப்படிடா அடிபட்டது!" என்று பிள்ளை கேட்டார்.

"புறங்கையால் என் முகவாய்க் கட்டையை ஓங்கி அடித்தான். பாவம்! அதனால் அவன் கையில் பலமாக அடிபட்டுவிட்டது" என்றான் கோபு.

சுந்தரம் பிள்ளைக்கு அடக்க முடியாத சிரிப்பு உண்டாயிற்று. "உன்னை அடித்துவிட்டு அவன் அழுகிறானா! நன்றாயிருக்கிறது!" என்றார்.




மேலே உள்ள அரைகுறைப் படங்கள் என்னென்ன என்று கண்டுபிடியுங்கள்!

ஜப்பானியர்களைப்போல் ஜப்பானில் இருக்கும் மரங்கள் கூடக் குள்ளமாகத் தான் வளரும். கீழே காட்டியுள்ள படத்தில் முதல் மரம் நூறு வருஷமாகியும் 2 அடி உயரம் தான் இருக்கிறது. மற்ற இரண்டு மரங்களும் முளைத்து அறுபது வருடங்களாகியும் 1½ அடி உயரந்தான் வளர்ந்திருக்கின்றன. ☆ ☆ ☆ ☆





கடலில் உள்ள திமிங்கிலத்தை எப்படிப் பிடிக்கிறார்கள், தெரியுமா? திமிங்கிலம் சில சமயங்களில் ஜல மட்டத்துக்கு மேல் முதுகை நீட்டும். அதைக் கப்பல் மேலிருந்து கவனிப்பார்கள். உடனே சூலம் போன்ற ஓர் ஆயுதத்தைப் பீரங்கியில் வைத்துத் திமிங்கிலத்தை நோக்கிச் சுடுவார்கள். அந்த ஆயுதத்தில் வெகு நீள-



-மான கயிறு கட்டியிருக்கும். சூலம் திமிங்கிலத்தின் மீது பாய்ந்ததும், அது ஜலத்துக்குள் கயிற்றையும் இழுத்துக் கொண்டு ஓடும். ஆனால் அது எங்கு போனாலும் கயிற்றின் மற்றொரு முனை கப்பலில் இருப்பவர்களிடம் தானே இருக்கிறது? ☆ ☆ ☆



கீழே உள்ள கடியாரம் லண்டன் காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது. இது பல நூற்றாண்டு காலமாகச் சரியான மணி காட்டுவதுடன், நிற்காமலும் ஓடுகிறது. இந்த அதிசயக் கடியாரம் பழமையான ஒரு மரத்தின் அடிப்பாகத்தைக் கொண்டு செய்யப்பட்டது. ☆ ☆ ☆ ☆






"என்ன ஸார்! பையன் ஏன் குதித்துக்குதித்து அழுகிறான்?"

"அதுவா, அவனுக்கு ரப்பர் பந்து வாங்கித் தரவில்லையாம். அதற்காக அப்படி அழுகிறான்!"



# நான்கு நன்மணிகள்





## மேட்டூர் சந்தன சோப்

பரிமளமிக்கது
பரிசுத்தமானது





கவர்ச்சிமிக்க
காந்தி அளிக்க

## ரூப் டாய்லெட் சோப்





## காவேரி ஸூபர் சோப்

சால்முக்ரா எண்ணெய் சேர்ந்தது
சுகாதாரத்திற்கு இன்றியமையாதது



சுத்தமான சலவைக்கு
உத்தமமான

## காவேரி பார் சோப்



மேன்மையான
"மேட்டூர் கெமிகல்ஸ்" தயாரிப்புகள்

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை — சேலம்

பூரண விற்பனை ஏஜன்டுகள்:
அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்
120, அரண்மனைக்காரத் தெரு. சென்னை & கிளைகள்

# சோலைக்கிளி

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

கோடை விடுமுறைக்குச் சுந்தரம் கிராமத்திற்கு வந்தான். மழையில்லாமல் எங்கும் ஒரே பஞ்சப் பாட்டாகத்தான் இருந்தது. ஆனாலும் ஆற்றில் முழங்கால் அளவுத் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. தோப்பும், கோவிலும் எப்பொழுதும் போல் அழகாகக் காட்சியளித்தன. கூண்டிலிருந்து வெளிப்பட்ட பறவையைப் போல் சுந்தரம் எங்கும் உல்லாசமாகத் திரிந்தான்.

ஒரு நாள் காலை ஆற்றோரமாக நடந்து போய்க் கொண்டிருந்தான். அப்போது அவனுடைய பால்ய சினேகிதன் கிருஷ்ணன் எதிரில் வந்தான். ஒருவரை யொருவர் யோக க்ஷேமங்களை விசாரித்துக் கொண்டார்கள். அப்போது அருகேயிருந்த வெற்றிலைத் தோட்டத்திலிருந்து ஒரு வயதான பெரியவரும் ஒரு பெண்ணும் வெளியில் வந்தார்கள். சுந்தரத்தைக் கண்டதும் அந்தப் பெண், “ஆ, சுந்தரம், ஊரிலிருந்து எப்போது வந்தாய்?” என்று ஆவலுடன் கேட்டாள்.

சுந்தரம் பதில் சொல்லுமுன் பெரியவர் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வேகமாக நடந்தார். நண்பர்கள் இருவரும் அவர்கள் போன வழியைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். பிறகு, “என்னப்பா, கிருஷ்ணா? வாத்தியார் ஏன் இவ்வளவு கோபமாக இருக்கிறார்?” என்று சுந்தரம் கேட்டான்.

“ஏதோ வெறிதான். இப்போது அவர் வாத்தியார் அல்ல, வைத்தியர். அநேகமாக கிராமத்தில் எல்லோரிடமும் இப்படித்தான் நடந்து கொள்ளுகிறார்.”

“சோலைக் கிளி எவ்வளவு பெரியவளாகி விட்டாள்! பாவம், ஆசையோடு பேச வந்த பெண்ணை எதற்காக இப்படி இழுத்துக் கொண்டு போகிறார்? என் மேல் அவருக்கு என்ன கோபம்?” என்று சுந்தரம் கேட்டான்.

“கோபம் உன் மேல் அல்ல; என் மீது தான். நான் துணிந்து, சோலையை எனக்குக் கல்யாணம் செய்து கொடுக்கும்படி கேட்டேன். அதற்கு என்னைக் கண்டபடி திட்டி, விஷம் வைத்துக் கொன்று விடுவதாகக் கூட எச்சரித்தார்!”

“இது என்ன கூத்தாயிருக்கிறது? நானே அவர் வீட்டிற்குப் போய் அவரைப் பார்க்க வேண்டும் என்றிருந்தேன். இனி அந்தப் பக்கம் போக வேண்டாமென்று சொல்!”

“இல்லை, இல்லை! கட்டாயம் போய்வா. உன்னை எப்படி வரவேற்கிறார் என்று பார்ப்போம்” என்றான் கிருஷ்ணன்.

* * *

நந்தசாமித் தேவர் அந்த கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் வைத்து நடத்தி வந்தார். அவருக்கு கிராமத்தில் நல்ல செல்வாக்கும் மரியாதையும் உண்டு. அவரிடம் படித்த மாணவர்களில் பலர் பெரிய பரீட்சைகள் எழுதி நல்ல உத்தியோகத்திலிருப்பதாக அவர் பெருமை அடித்துக் கொள்வார். அவருடைய மனைவி ஒரு பெண் குழந்தையை விட்டுவிட்டுச் சிறு வயதிலேயே இறந்து விட்டாள். அந்தப் பெண்ணை அவரே தாயும் தந்தையுமாக இருந்து வளர்த்தார். பள்ளிக்கூடத்திற்குப் போகும்போது தம்முடனே அழைத்துச் செல்வார். தாயில்லாப் பெண்ணாகையால் கிராமத்தில் சோலைக்கு ஒரு தனிச் சலுகை உண்டு. அவளும் அதற்குத் தகுந்தபடியே அழகும் குணமும் அறிவும் பொருந்தியவளாக இருந்தாள்.

பெண்ணுக்கு வயது ஏற ஏறத் தேவருடைய மனப்பான்மையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பள்ளிக்கூடத்தை நிறுத்தி விட்டு வைத்தியத்தில் ஈடுபட்டார். ஏதேதோ விஷப் பரீட்சைகளும் ஆராய்ச்சிகளும் அவர் செய்து வருவதாக கிராமத்தில் வதந்தி உலாவியது.

இப்பொழுது இரண்டொரு வருடங்களாக அவர் யாருடனும் அதிகம் பேசுவதில்லையென்றும், சோலையிடம் யாரையும் நெருங்க விடுவதில்லையென்றும், அவள் எங்கும் தனியாகப் போகமுடியாதபடி அவளுக்கு ஒரு கிழவியைக் காவல் வைத்திருப்பதாகவும் கிருஷ்ணனிடமிருந்து சுந்தரம் அறிந்து கொண்டான்.

* * *

மறுநாள் காலை ஒன்பது மணிக்குத் தேவர் பலகாரம் சாப்பிட்டுவிட்டுத் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார். சுந்தரம் வாசலில் நின்று

படி தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, மெதுவாக "நமஸ்காரம், ஸார்!" என்றான்.

சுந்தரத்தைக் கண்டதும் ஒரு மாறுதலும் இல்லாமல் "வா அப்பா, சுந்தரம்! என்ன சமாசாரம்? எப்பொழுது வந்தாய்? படிப்பெல்லாம் எந்த மட்டில் இருக்கிறது?" என்று விசாரித்தார் தேவர்.

"உங்களுடைய மாணாக்கனாகிய நான் சோடையாகப் போவேனா, ஸார்? இந்த வருடத்தோடு படிப்பு முடிந்து விடுகிறது. நான் வந்து இரண்டு நாளாகிறது. தாங்கள் ஏதோ ஆராய்ச்சிகள் செய்வதாகக் கேள்விப்பட்டேன்..." என்றான்.

"ஆமாம்; விஷக்கடிக்குப் பல புதுப் பரிகாரங்கள் கண்டு பிடித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் சில நாளில் எல்லாம் கைகூடிவிடும் என்று எண்ணுகிறேன்!"

"அதையெல்லாம் ஆராய்வதற்கு வேண்டிய வசதிகள் இங்கே உங்களுக்கு இருக்கிறதா?"

"ஏன் இல்லை? இங்கேதான் வேண்டிய வசதி கிடைக்கிறது. பல விஷப் பாம்புகளை வைத்துப் பரீட்சை நடத்துகிறேன். மூலிகைகளும் ஏராளமாகக் கிடைக்கின்றன. பக்கத்தில் வெற்றிலைக் கொடிக்கால் இருக்கிறதே, அங்கேதான் ஒரு பாகத்தை அடைப்புகள் போட்டு இதற்காக மறைத்து வைத்திருக்கிறேன். ஒரு நாள் உனக்கு எல்லாம் காட்டுகிறேன், வா!" என்றார்.



"ரொம்ப வந்தனம், ஸார்! வைத்தியப் பரீட்சைக்குப் படிக்கும் எனக்கு இதெல்லாம் எவ்வளவோ உதவியாயிருக்கும். அவசியம் வருகிறேன்."

பிறகு, "சோலை, சுந்தரத்திற்கு சாப்பிட ஏதாவது கொண்டுவா!" என்று தேவர் கூறினார்.

"வேண்டாம், ஸார்! வீட்டில் இப்பொழுதுதான் சாப்பிட்டேன்..." என்று சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, சோலைக்கிளி கையில் இரண்டு பாத்திரங்களுடன் அங்கே வந்தாள். அவளுடைய முகத்தைப் பார்ப்பதற்குக்கூட சுந்தரத்திற்குத் தைரியம் வரவில்லை. சோலை பாத்திரங்களை அவன்முன் வைத்துவிட்டு நிமிர்ந்தாள். ஆவலை அடக்க முடியாமல் சுந்தரம் மெதுவாக நிமிர்ந்து அவள் முகத்தை நோக்கினான். வசீகரம் மிக்க அந்த அழகிய முகத்தில் சாந்தமும் குதூகலமும் பொங்கித் ததும்பின.

தேவர் தம் மகளை நோக்கி "சோலை, சுந்தரத்தை நினைவிருக்கிறதா? அம்மா!" என்று கேட்டார்.

"இல்லாமல் என்ன?" என்று சொல்லிவிட்டு அவசரமாக உள்ளே போய்விட்டாள் அவள்.

தேவருடைய முகத்தில் ஒரு கணம் ஏதோ ஒரு மாறுதல் தென்பட்டது. ஆனாலும் அதைச் சமாளித்துக் கொண்டு, "சாப்பிடு அப்பா, பட்சணங்கள் தயாரிப்பதில் சோலை ரொம்பக் கைதேர்ந்தவள்" என்றார்.

பட்டணத்தில் காப்பி ஹோட்டல்களில் அழுக்குப் பிடித்த பாத்திரங்களில், எண்ணெய் நாற்றமும், இன்ன சாமானால் செய்தது என்று கண்டுபிடிக்க முடியாததுமான பட்சணங்களை உண்டு பழக்கமான சுந்தரத்திற்கு, பளபளவென்று தேய்த்த வெண்கலப் பாத்திரங்களில் வைத்திருந்த புட்டும் காப்பியும் ரொம்ப ருசியாகவும் திருப்தியாகவும் இருந்தது. அதோடு சோலைக் கிளி தன் கையினாலேயே செய்து, அன்புடன் அளித்ததல்லவா? சற்று நேரம் லோகாபிராமமாகப் பேசிக் கொண்டிருந்து விட்டு சுந்தரம் விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்தான். நாலடி நடந்ததும் ஏதோ ஒரு உணர்ச்சி அவனைத் திரும்பிப் பார்க்கச் செய்தது. காமரா உள்ளின் ஜன்னல் வழியாக சோலையின் தாமரை முகம் தெரிந்தது. அவளுடைய கண்கள் அவனுடன் பேசுவதாகவும் அவனுக்குத்

தோன்றின. அன்று இரவிற்குள் ஆயிரம் பதினாயிரம் முறை அந்த அழகிய முகம் அவன் மனக் கண்ணில் தோன்றி மறைந்து கொண்டே வந்தது.

• • •

மறுநாள் காலை சுந்தரம் ஏதோ புது மனிதன்போல் காணப்பட்டான். கிருஷ்ணனுடைய வீட்டிற்குப் போய் நடந்தவற்றை எல்லாம் சொன்னான். அதையெல்லாம் கேட்ட கிருஷ்ணன், "என்னவோ அப்பா! அந்த மனிதனுடன் பழகுவது பாம்புடன் விளையாடுவது போல்தான். ஆகையால் வெகு ஜாக்கிரதையாக இரு" என்று எச்சரித்தான்.

மற்றும் ஒரு வாரத்தில் தோப்பிலும் ஆற்றிலும் பல தடவை சோலைக்கிளியையும் கந்தசாமித்தேவரையும் சுந்தரம் சந்தித்தான். ஆனால் அவர்கள் அதிகம் பேசக்கொடுக்க விரும்பாதவர்கள் போலத் தோன்றினார்கள். நாளுக்குநாள் சுந்தரத்தின் ஆவலும் ஆத்திரமும் வளர்ந்து கொண்டே வந்தது.

திடீரென்று ஒரு நாள் கந்தசாமித் தேவர் ஏதோ காரியமாக அடுத்த ஊருக்குப் போகிறார் என்றும் திரும்பி வர மூன்று தினங்கள் பிடிக்கும் என்றும் அறிந்தான். அவன் மனம் துடித்தது. அந்தச் சமயத்தை எந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று அவன் மூளை தீவிரமாக வேலை செய்தது.

கடைசியில் அந்த நாளும் வந்தது. சுந்தரம் தேவரின் வீட்டை அடைந்தான். கதவு தாளிடப் பட்டிருந்தது. முதலில் சிறிது தயங்கினான். பிறகு சற்றுத் துணிவடைந்து "ஸார்! ஸார்!" என்று கதவை இடித்தான். சில நிமிடங்கள் கழிந்து, ஒரு கிழவி வந்து கதவைச் சிறிது திறந்து "தேவர் வெளியில் இல்லை" என்று சொல்லி விட்டுக் கதவைப் 'படீ' ரென்று சாத்தித் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு போய் விட்டாள். சுந்தரம் பெரிதும் ஏமாற்றம் அடைந்தான். விளக்கு வைத்துச் சந்திரனும் இலேசாக மேலே எழும்பி வந்து கொண்டிருந்தான். அந்த வீட்டை விட்டு வர மனமில்லாதவன் போல் வாசலில் சிறிது நேரம் நின்று விட்டுப் பிறகு மெதுவாக நடக்கலானான். அப்பொழுது திடீரென்று தன்னை யாரோ மெதுவாக அழைப்பதாகத் தோன்றியது. திரும்பிப் பார்த்ததும் காமரா உள்ளில் சோலைக்கிளி நின்று கொண்டிருப்பது தெரிந்தது. சுந்தரம் நேரே ஜன்னலருகே சென்றான். அப்பொழுது அவள், "சுந்தரம்! நான் சொல்வதைக் கேளுங்கள். இனிமேல் இந்த வீட்டுப் பக்கம் வரவே வேண்டாம்" என்று சொன்னாள்.

"உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியாது. இது என்ன அநியாயம், சோலை? எந்தத் தகப்பனும் மகளுக்கு இப்படிக் கேடு செய்ய மாட்டார். நீ விரும்பினால் இன்றே உன்னை இச் சிறையிலிருந்து விடுவித்துக் கொண்டு போகிறேன். என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான் சுந்தரம்.

"போதும், தூங்கப்போன கிழவி எழுந்து வந்தாலும் வந்து விடுவாள். பிறகு நம் இருவருடைய உயிரும் யமனிடம் போன மாதிரித்



தான். நீங்கள் போய் விடுங்கள். என்னுடைய வாழ்நாள் இப்படியே முடிய வேண்டியதுதான். இது என் தலைவிதி" என்று மெதுவாகச் சொன்னாள் சோலைக்கிளி. அந்த இருட்டு வெளிச்சத்திலும் கூட அவள் கண்களில் கண்ணீர் வழிவது தெரிந்தது.

"விதியாவது, மண்ணாவது! எல்லாம் நாமாக எண்ணிக் கொள்வது. உனக்கு என் மீது பிரியமும் நம்பிக்கையும் இருக்கிறது என்று ஒரு வார்த்தை சொல். அதுவே இப்போதைக்குப் போதும். நான் நாளையும் வருகிறேன்."

"நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? உங்களுக்கு ஒருவிதத்தீங்கும் நேரக் கூடாது என்பதுதான் என் ஆசை. ஆகையால் நான் சொல்வதைத் தட்டாதீர்கள். நாளைமாத்திரமல்ல. இனி ஒருபோதும் இந்த வீட்டுக்கு வாராதீர்கள்" என்று சொல்லி விட்டு அவள் மறைந்து விட்டாள்.

இரவு முழுவதும் தூங்காமல் புரண்டு புரண்டு யோசனை செய்தான் சுந்தரம். தான் படித்த காதல் கதைகளில் வரும் 'ஹீரோ'க்களுடைய தியாகங்களை எல்லாம் நினைவு படுத்திக் கொண்டான் அவன்.

மறு நாளும் அவனுடைய கால்கள் அவனைத் தேவர் வீட்டிற்கு இழுத்துச்சென்றன. வெகு நேரம் காத்திருந்து நிராசையுடன் திரும்பும்போது காமரா உள்ளின் ஜன்னல் கதவுகள் திறந்து கொண்டன. சோலைக்கிளி சிறிது கோபத்துடன், "நான் எவ்வளவோ எச்சரித்தும் நீங்கள் மறுபடியும் வந்து விட்டீர்கள். நேற்றே கிழவிக்கு ஏதோ சந்தேகம். கடைசி முறையாகச் சொல்லுகிறேன்: இனி இங்கே வர வேண்டாம்" என்று சொல்லி விட்டு ஜன்னலை மூடப் போனாள். அப்போது சுந்தரம் பாய்ந்து அவள் கையைப் பிடித்துக் கொண்டு "தங்கக் கிளி, நான் சொல்வதைச் சிறிது பொறுமையுடன் கேள். நாம் காதலித்துக் கல்யாணம் செய்து கொள்வதில் என்ன தப்பு இருக்கிறது? சந்தோஷமான முறையில் உன் தந்தை சம்மதம் அளித்தால் அளிக்கட்டும்; இல்லாவிடில் நாம் மணம் செய்து கொள்வதை யாரும் தடுக்க முடியாது" என்று படபடப்புடன் கூறினான். அதற்குள் சோலை கையை வெடுக்கென்று விடுவித்துக் கொண்டாள்.

அந்தச் சமயத்தில் திடீரென்று கையில் லாந்தருடன் கிழவி கதவைத் திறந்து கொண்டு வெளியில் வந்தாள். ஊருக்குப் போயிருந்த கந்தசாமித் தேவரும் அதே சமயத்தில் அங்கு வந்துவிட்டார்.

திக்பிரமை அடைந்த சுந்தரம் மின்னல் வேகத்தில் வீட்டின் மறுபக்கம் ஓடிச் சுவரைத் தாண்டிக் குதித்து விட்டான். தேவர் அந்தக் காட்சியைப் பார்த்தாரா இல்லையா என்று சோலையால் அறிந்து கொள்ள முடியவில்லை.

* * *

மறு நாள் காலை தேவர் ஒரு அதிசயமான காரியம் செய்தார். சுந்தரத்தைத் தம் வீட்டில் சாப்பிட அழைத்தார்.

சுந்தரமும் அழைப்பை ஏற்றுக் கொண்டு அவருடைய வீட்டுக்குச் சென்றான். கூடத்தில் இலை போட்டுப் பரிமாறியிருந்தது. தேவரும் சுந்தரமும் சாப்பிட உட்கார்ந்து கொண்டார்கள். பழைய பள்ளிக்கூட அனுபவங்களைச் சுந்தரம் ரசமாகச் சொல்லிக் கொண்டேயிருந்தான்.

அதுதான் சமயம் என்று சோலையும் மெதுவாகத் தந்தையின் அறையில் நுழைந்தாள். அவள் வெளியே வந்த பொழுது அவர்கள் இருவரும் முற்றத்தில் கையலம்பிக் கொண்டிருந்தார்கள். பிறகு வெளித் திண்ணையில் உட்கார்ந்து கொண்டு வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அவர்கள் கொடிக்கால்தோட்டத்தை நோக்கி நடந்தார்கள். அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்த சோலையின் கண்களில் கண்ணீர் ததும்பியது. ஏதோ விபரீதம் நடக்

## பொம்மைக்கும் தரிசனம்!



கப் போவதாக அவன் உள்ளம் கூறியது. வெற்றிலைத் தோட்டத்தின் ஒரு பாகம் நல்ல பந்தோபஸ்தான முறையில் அடைப்புக்கள் வைத்துக் கட்டப்பட்டிருந்தது. அதற்குள் தேவர் நிர்ப்பயமாக நுழைந்தார். பாம்புகள் பல நிறங்களிலும் இருந்தன. சில அழகாயும் சில அருவருப்பாயும் சில பயங்கரமாயும் காட்சி யளித்தன. கடைசியாக விஷப்பாம்புகள் இருந்த கூடுகளை அவர் காண்பித்தார். "இதோ பார், இந்தப் பாம்பின் மூச்சுப் பட்டாலே போதும். விஷம் ஏறிவிடும். ஆனால் இது என்னை ஒன்றும் செய்யாது" என்று சொல்லிக் கொண்டே கையால் தட்டி அதற்குக் கோபமூட்டினார். அந்தக் கொடிய பாம்பின் கண்கள் சிவந்து ரத்தினங்கள் போலப் பிரகாசித்தன. சுந்தரம் பயந்து நடுங்கிக் கண்களை இறுக மூடிக் கொண்டான்.

அடுத்த நிமிடம் தேவர், "ஆ" என்று அலறிவிட்டு "பிசாசே! என்ன செய் கிறன், பார்!" என்று மடியிலிருந்து ஒரு சிறிய சீசாவை வெளியில் எடுத்தார். அதில் ஜலம்போல் ஒரு திராவகம் இருந்தது. அதை எடுத்துக் கையில் தடவினார்.

சுந்தரத்திற்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. அவன் தேவர் அருகில் சென்று "ஐயோ! உங்களை அந்தக் கொடிய பாம்பு கடித்து விட்டதே!" என்றான்.

"பயப்படாதே, மருந்து தடவிவிட்டேன். இன்னும் சில நிமிஷங்களில் எல்லாம் சரியாய் விடும்" என்று சொன்னார் தேவர்.

ஐந்து நிமிஷமும் கழிந்தது. சுந்தரம் தேவரின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

திடீரென்று தேவர் "ஐயோ! மோசம்!" என்று கதறிக் கொண்டு, மருந்து சீசாவை எடுத்து அப்படியும் இப்படியுமாகத் திருப்பிப் பார்த்தார். ஏதோ பேச வாய் திறந்தவர் அப்படியே மயங்கி விழுந்து விட்டார்.

அந்தச் சமயத்தில் அடைப்பின் கதவைத் திறந்துகொண்டு சோலைக்கிளி ஓடிவந்தாள். ஒரு விநாடியில் நிலைமையை யுணர்ந்து கொண்டாள். "ஐயோ! அப்பா! உங்களை ஏமாற்றி விட்டேனே! உண்மை மருந்தை நான் எடுத்து வைத்துக் கொண்டு சீசாவில் வெறும் ஜலத்தை நிரப்பி வைத்து விட்டேன். பாவியாகிய நான் உங்கள் உயிருக்கே உலை வைத்து விட்டேனே!" என்று அவர் மேல் விழுந்து கதறினாள்.

"ஒன்றும் மிஞ்சிப் போகவில்லை. அந்த மருந்தைக் கொடு, தடவலாம்" என்று சொல்லி சுந்தரம் அவளிடமிருந்து மருந்தை வாங்கித் தேவரின் கையில் தடவினான்.

இருவரும் அவர் முகத்தை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நிமிஷம் போவது ஒரு யுகமாகத் தோன்றியது. தேவர் மெதுவாகக் கண்களைத் திறந்தார்.

"அப்பா, நான் செய்த பிழையை மன்னிக்க வேண்டும்" என்றாள் சோலை.

தேவர் மெதுவாகக் கையை உயர்த்தி மகளின் கைகளைப் பிடித்துக் கொண்டு, "சோலை! என் கண்ணே! நீதான் என்னை மன்னிக்கவேண்டும். 'தன் வினை தன்னைச் சுடும்' என்று சொல்லுவார்கள். அதுபோல் பிறருக்கு வெட்டிய குழியில் நானே விழுந்தேன். சுந்தரத்தை ஏமாற்றி விஷத்திற்கு இரையாக்கப் பார்த்தேன். கடைசியில் நானே அதற்குப் பலியாகி விட்டேன்" என்று தட்டுத் தடுமாறிச் சொன்னார். ஆயாசத்தினால் அவர் கண்கள் மூடிவிட்டன.

சிறிது நேரத்திற்கெல்லாம் தேவர் மறுபடியும் கண்களை மெதுவாகத் திறந்தார். "அம்மா, சோலை! என்னை மன்னித்து விடு. உன்னை என் உயிரினும் மேலாக வளர்த்தேன். அந்தப் பாசத்தால் உன்னை வேறு யாரும் நாடக் கூடாது என்று பொறாமையுடன் அடைத்து வைத்தேன். பெண்ணுள்ளம் தந்தையின் அன்போடு திருப்தியடையாது என்று உணராத மூடனாகி விட்டேன். இனி நான் பிழைத்து நீங்கள் இருவரும் சந்தோஷமாக இருப்பதைக் காணப் போவதில்லை" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே கூறினார்.

"இல்லை! அப்பா, இல்லை! நீங்கள் கட்டாயம் பிழைத்துக் கொள்வீர்கள்" என்றாள் சோலைக்கிளி.

இதற்குள் தேவரின் நிலைமையும் தோற்றமும் மோசமாகி விட்டது. மூன்றாவது தடவையாக அவர் கண்களைத் திறந்தபோது அவர் முகத்தில் ஒரு புன் சிரிப்பும் நிம்மதியும் நிலவியது. அதோடு அவர் இவ்வுலகத்திலிருந்து விடைபெற்றுக் கொண்டார்.

• • •

சில மாதங்களில் சுந்தரம் சோலைக்கிளியின் சுந்தரமாகி விட்டான் என்று சொல்ல வேண்டியதில்லை. ஊராருக்கு விஷயம் முழுவதும் தெரியாவிட்டாலும் ஏதோ தேவரின் அஜாக்கிரதையினால்தான் பாம்பு கடித்தது என்று எண்ணினார்கள். 'பாம்பு மிதித்தால்தான் கடிக்கும். கொஞ்சித்தால் கடியாது' என்ற பழமொழியை அவர்கள் ஞாபகப்படுத்திக் கொண்டார்கள்.

# சந்திப்பு

எஸ். கே. ஆர்.

தங்கத்துக்கு அப்போது வயது பதினொன்று இருக்கலாம். பள்ளிக் கூடத்தில படித்துக் கொண்டிருந்தாள். சிறு வயதிலேயே மூக்கும் முழியுமாக அழகாக இருப்பாள்.

அவள் எனக்குச் சொந்தப்தான். ஆனால், ஏழையாகிய நான் அவள் மீது சொந்தம் கொண்டாடுவதைக் கேட்டால் உலகம் சிரிக்கும். பாதகமில்லை—அப்போது நான் காலேஜ் படிப்பை முடித்து விட்டு ஊருக்குச் சென்றிருந்தேன். வேலைக்காக முயற்சியும் செய்து கொண்டிருந்தேன். ஒழிந்த நேரமெல்லாம் தங்கத்தின் வீட்டில் தான் வாசம். அவள் எனக்குக் கிடைக்கமாட்டாள் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், ஏதோ ஒரு விதமான கவர்ச்சி அங்கு செல்லும்படி என்னை அடிக்கடி தூண்டியது. அவளுடைய மழலை நீங்காத பேச்சும் பழக்க வழக்கங்களும் என் மனதைக் கவர்ந்தன. அவளைக் காணும் போது எனக்கு எல்லையற்ற குதூகலம் உண்டாகிவிடும். நல்ல வேளை, பெற்றோர்கள் இதற்கு எந்தவிதமான இடைஞ்சலும் செய்யவில்லை.




குடைக்காரர்:—நேற்று நீங்கள் என்னைத் தெருவில் பார்த்து விட்டுக் கொஞ்சம் வேகமாக நடந்து போய் விட்டீர்களே?

செட்டியார்:— காலில் இரண்டு நாட்களாய் கொஞ்சம் சுளுக்கு, ஓட முடியவில்லை.

அவள்மீது நான் காதல் கொண்டது அவளுக்குத் தெரியாது. சிறு பெண். உலக விவகாரங்களில் அவளுக்கு அநுபவம் சூனியம். எல்லோரையும் போலவும் என்னோடு சிரித்து விளையாடி வந்தாள். நான் நாள் தோறும் அவளுக்கு விதவிதமான கதை சொல்லுவேன். அருமையான பாட்டுக்கள் பாடுவேன். அவள் அவைகளைக் கேட்டு ஆனந்த மடைவாள்.

ஒரு நாள் மாலை வீட்டில் யாருமே இல்லை. தங்கம் பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாள். நன்றாகத் தலையை வாரிப் பின்னி, பூச்சூடி, நெற்றியில் திலகமிட்டு வழக்கத்திற்கு மாறாக அழகிய புடவை ஒன்றையும் அணிந்திருந்தாள்.

நான் போய்க் கட்டிலில் உட்கார்ந்தேன். அவள் அருகே ஓடிவந்து. "இன்று முதல் பதினைந்து நாளைக்கு லீவு, மாமா! நிறையக் கதை சொல்ல வேண்டும். இன்று என்ன கதை சொல்லப் போகிறீர்கள்?" என்று ஆவலுடன் கேட்டாள்.

அவளுடைய குழந்தை உள்ளத்தைக் கண்டு எனக்கு பச்சாதாபமும் ஏக்கமும் உண்டாயிற்று. அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டு துயரத்துடன், "தங்கம், இப்போதுதான் கதை சொல்லுகிறேன். நீ பெரியவளாகி, உனக்குக் கல்யாணம் நடந்து, மற்றவன் வீட்டுக்குப் போனபின் உனக்குக் கதை சொல்லுவது யாரம்மா?' என்று கேட்டேன். அவள் வெட்க மிகுதியால் முகத்தைச் சுளித்துக் கொண்டு, "போ மாமா, உனக்கு எப்போதும் விளையாட்டும் கேலியும்தான்" என்றாள்.

அந்த நேரத்திலே அவளுடைய களங்கமற்ற முகமும் நீல விழிகளும் சிவந்த கன்னங்களும் முன்னிலும் பன் மடங்கு அழகு பெற்று விளங்கின.

நான் அவளுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "தங்கம், இப்படியே கொஞ்ச நேரம் நில். இன்று நீ தெய்வலோக ரம்பையைப் போலிருக்கிறாய். நீ யாருக்காக வளருகிறாயோ? இருந்தபோதிலும் உன் அழகையாவது கொஞ்ச நேரம் பருகுகிறேன்" என்று

சொன்னவாறு அவளுடைய அழகிய முகத்தையே வெகு நேரம் உற்று நோக்கிப் பரவசம் அடைந்தேன்.

அவளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. குழந்தை! தந்தையிடமும் தங்கையிடமும் பக்கத்து வீட்டுக்காரச் சிறுவனிடமும் ஒரே மாதிரியான அன்பு வைத்திருந்தாள். அவள் களங்கமற்ற பசும் பொன். துன்பங்களும் மாசுகளும் நிறைந்த யௌவனத்தை எட்டிப் பாராத நிரபராதி.

* *

நாட்கள் பல கழிந்தன. வேலை கிடைக்கவில்லை. பட்டண வாசத்தால் செலவு அதிகமானதால் கிராமத்திற்குப் போக வேண்டுமென்று விரும்பினர் என் பெற்றோர். எல்லோரும் கிராமத்திற்குப் போய் விட்டோம்.

அதன் பின் பல மாதங்களுக்கு ஒரு முறை அத்தி பூத்ததுபோலப் பட்டணத்திற்குப் போவேன். தங்கத்தைப் பார்ப்பேன். அவளுடன் இப்போது தாராளமாகப் பேச முடிவதில்லை. வயது குறுக்கிடுகிறது அல்லவா? இயற்கையாகப் பெண்களுக்கு அமைந்த நாணத்தின் காரணமாக அவளும் ஓரளவு ஒதுங்கி வந்தாள். பட்டணத்துக்குப் போகும்போதெல்லாம் அவளைப் பார்ப்பதன் மூலம் சோர்ந்து போன என் கண்களுக்கு ஒரு விருந்தளித்து வந்தேன்.

அவளுக்கு ஒரு குறையும் இல்லை. செல்வத்திற்குச் செல்வம். அன்பு மிகுந்த தாய் தந்தையர், நினைத்ததைப் பெற்று அனுபவிப்பதற்கு வசதிகள். பசுமையான ஆரண்யத்திலே, தன்னிச்சையாகப் பாடிக் கொண்டு திரியும் குயில் போல அவள் நாட்களைக் கழித்து வந்தாள். மங்கைப் பருவத்தையும் அடைந்தாள்.

என்னுடைய நிலைமையோ எப்போதும் போலவே இருந்து வந்தது. எங்கும் வேலை கிடைக்கவில்லை. கிராமத்திலே இரண்டு பெரிய வீட்டில் 'டியூஷன்' சொல்லிக் கொடுத்து வந்தேன். அதுவே அப்போதைக்கு வேலை. தந்தை பிடிவாதம் செய்ததன் பேரில் கல்யாணமும் ஆயிற்று. அதிலிருந்து தொல்லைகளும் ஒன்றன் பின் ஒன்றாக ஆரம்பமாயின. வாழ்க்கையில் வெறுப்படைந்தேன். ஏக்கம் மிகுந்தவனாய் நாளைக் கழித்து வந்தேன்.

தங்கம் விலையுயர்ந்த புடவைகளை உடுத்தினாள். பலவிதமான நகைகள் அவளுடைய அழகுக்கு அழகு செய்தன. பெற்றோர்கள் அவளுடைய மனம் கோணாதபடி வேண்டியதை எல்லாம் அவளுக்கு அளித்து வந்தனர். செல்வத்தினால் பெறக்கூடிய சுக போகங்களையெல்லாம் அவள் ஒன்று விடாமல் அநுபவித்தாள். ஆனால் ஏதோ ஒன்றை நினைத்து அவளுடைய உள்ளம் ஏங்கிற்று. வசந்தத்தில் பசுமரங்கள் துளிர்த்து, பூக்கள் மலர்ந்து, தென்றல் வீசியபோது அவளுக்குப் பெருமூச்சும் சோர்வும் உண்டாயின.

திடீரென்று அவளுடைய தந்தை இறந்தார். அத்துடன் பாக்கிய சக்கரமும் மாறிற்று. செல்வத்தில் பெரும் பகுதியைக் கடன்காரர் கொண்டு போய் விட்டார்கள். இப்போது அவளுக்குத் துணையாக வயது சென்ற அவள் தாய் மாத்திரம் இருந்தாள். தங்கத்துக்கு வயது



# சித்திராங்கன் விசித்திரம்



9

சித்திராங்கனுக்கு ஒரு அதிசயக் கரிக்கட்டி கிடைத்தது. அந்தக் கரிக்கட்டியால் அவன் சுவரில் எழுதிய சித்திரங்கள் உயிர் பெற்று வந்தன.



"ஏதுவேண்டுமானாலும் வரவழைத்து விடுவாயாமே! எங்கே, புலிப்பால் கொண்டு வா பார்க்கலாம்" என்றார் செட்டியார் சித்திராங்கனைப் பார்த்து.



"சற்று இருங்கள். கொண்டுவருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் சித்திராங்கன் சுவரில் ஒரு புலி எழுதினான்.



உயிர் பெற்றபுலியை அழைத்து வந்தான். "இந்தாருங்கள். நான் புலியைக் கொண்டுவந்துவிட்டேன். பாலை நீங்களே கறந்து எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.



-சாமா

செட்டியார் பயந்து ஓடத்தொடங்கினார். "நீங்களே பாலைக் கறந்துகொள்ளும் வரையில் புலி உங்களை விடப்போவதில்லை" என்றான் சித்திராங்கன்.

பதினைந்திற்கு மேலாயிற்று. கல்யாணம் ஆகவில்லை. பெரிய இடத்திலே இப்போது சம்பந்தம் கிடைக்காது. சாதாரண இடங்களில் கொடுக்கலாமென்றால் யாரும் திரும்பிப் பார்ப்பதாக இல்லை. நாட்கள் மாதங்களாகி மாதங்கள் வருஷங்களாகி வந்தன. ......மங்கைப் பருவமடைந்து மூன்று வருஷங்களாயின.

அந்த ஏழைப் பெண் கவலையில் மூழ்கித் தவித்தாள்.

• • •

சம்சார சாகரத்தில் மூழ்கிய நான் வெளிவர முடியாமல் திணறிக் கொண்டிருந்தேன். உடம்பு இளைத்து ஆளே அடையாளம் தெரியாமல் மாறிப் போனேன்.

எட்டு ஒன்பது மாதம் கழித்துப் பட்டணத்திற்குப் போயிருந்தேன். தங்கம் வீட்டில் தனியாக இருந்தாள். எனக்கு முன்னால் வர அவள் முதலில் வெட்கப்பட்டாள். பிறகு என்னைக் கட்டிலில் உட்காரும்படி சொல்லி விட்டு, அவள் கதவருகே நிலையைப்பிடித்தவாறு நின்று என்னைப் பார்த்தாள். நானும் அவளைப் பார்த்தேன். பாவம், மூன்று நான்கு வருஷத்திற்கு முன்னிருந்த தங்கம்தானா என்று நான் அதிசயித்தேன்.

"என்ன விசேஷம்?" என்று கேட்டேன் நான்.

"ஒன்றுமில்லை" என்றாள் அவள். பொங்கிவந்த துயரத்தை ஒருவாறு அடக்கிக் கொண்டு அவளுடைய கண்கள் நிலத்தை நோக்கின. இரண்டு துளிக் கண்ணீர் கீழே சிந்திற்று.

எனக்கும் துயரம் மிகுந்தது. அந்த நிலைமையில் அவளைக் கண்டதும் முகத்தை இரு கையாலும் தாங்கியவாறு கவலைக் கடலில் மூழ்கினேன்.

சென்ற காலம் அவள் கண்முன் தோன்றியது. 'ஐயோ, இரண்டு பேருடைய வாழ்வும் பாழாயிற்றே!' என்று அவள் ஏங்கினாள். அணை உடைத்துவரும் வெள்ளம்போலத் துயரம் பொங்கியது. தேம்பித் தேம்பி அழுதாள்.

அவள் அழவேண்டிய காலம் வந்து விட்டது என்று கருதினேன் நான். என் கண்ணிலிருந்தும் நீர் ஊற்றுப் போலப் பொங்கிப் பெருகிற்று.

★ “அவள் முகத்தைப் பார்த்தேன். நிலவொளியும் அவள் முகப் பொலிவும்—ஆகா! என்னை எங்கேயோ இழுத்துச் சென்றன.....!”

# இன்பக் கனவு

**துஷ்யந்தன்**

தனிமையை நாடி இமயத்திற்குப் போகிறவர்களும் உண்டு. தனிமை பிடிக்காமல் பக்கத்து வீட்டுக் கிழவரிடம் போய்ப் பேசுகிறவர்களும் உண்டு. நான் இப்படியெல்லாம் செய்வதில்லை. தனிமை வேண்டுமானால் என் வீட்டு மொட்டை மாடியிலேயே சாதித்துக் கொள்வேன். துணை வேண்டுமானாலும் அங்கிருந்தபடியே வானத்தில் நிறைந்து கிடக்கும் ஆயிரமாயிரம் நட்சத்திர மோகினிகளுடன் பேச ஆரம்பித்து விடுவேன். உங்களுக்கு வியப்பாயிருக்கலாம். அது ஒன்றும் பிரமாதமான காரியமல்ல. ரயில், சினிமா, ஹோட்டல் இங்கெல்லாம் சினேகம் பிடித்து வளர்த்து வருவதைவிட இது சுலபமான சாதனைதான்.

அன்றும் அப்படித்தான் ஆகாயத்தின் தொடர்பைப் பெற முயன்று கொண்டிருந்தேன். இடம் கொஞ்சம் புதிது. அன்றுதான் புதுக்குடித்தனம் வந்திருந்தேன். சாவி கிடைக்கத் தாமதமானதில் இருட்டிய பிறகுதான் நானும் என் புத்தகங்களுமாக—மனைவிக்குப் பதில் என்னுடன் இருப்பவை—வந்து சேர்ந்தோம். ‘ரொம்ப நாளாக யாருமே குடியில்லாத வீடு’ என்று என் நண்பர் சொன்னார். ‘ஏன்?’ என்ற அனாவசியமான கேள்வியெல்லாம் அப்போது நான் கேட்கவில்லை. வந்து விட்டேன்.

ஆகாயத்திலிருந்து கண்ணைத் திருப்பி என் சுற்றுப்புறத்தை நோக்கிச் சுழலவிட்டேன். என் வீட்டு மாடிக்கும் பக்கத்து வீட்டினுடையதற்கு மிடையில் ஒரு சிறிய கைப்பிடிச் சுவர்தான் இருந்தது. அங்கிருப்பவர்கள் இங்கே பார்க்கலாம். இங்கிருந்தும் அங்கே பார்க்கலாம். இரண்டடி உயரமுள்ள ஒற்றைக் கல் சுவர் ஒன்றுதான் இரண்டு வீட்டின் மனிதர்களையும் பிரித்து வைக்க முயன்று கொண்டிருந்தது.

பக்கத்து வீட்டில் யார் இருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது. ஒருகால் அந்த வீடும் ரொம்ப நாளாகப் பூட்டிக் கிடக்கிறதோ என்னவோ? மெல்ல நடந்து கைப்பிடிச் சுவர் அருகே வந்து நின்றேன். அந்த வீட்டு மாடியில் பூச்சாடிகள்கூட இருந்தன. வீடும் சுத்தமாக இருந்தது. நான் நினைத்தது போலப் பூட்டிக் கிடக்கவில்லை. யாரோ இருக்கிறார்கள்.

யாராயிருந்தாலும் அவர்கள் என்னைப் போலக் கொஞ்சம் ‘ஒருமாதிரி ஆசாமிகள்’ ளாகத்தான் இருக்கமுடியும். இல்லாவிட்டால் மனித சஞ்சாரமேயில்லாத இடத்தில், ஊருக்கு வெளியே, பெரிய தோட்டத்தின் நடுவே தனித்திருக்கும் அங்கே வேறு யார் குடியிருப்பார்கள்? என் சிந்தனை தடைப்பட்டு நின்றது. யாரோ மாடிப்படிகளில் ஏறிவரும் சத்தம் கேட்டது. ஆவலோடு பார்த்தேன். பேர்வழி வருவதற்கு முன் ஜவ்வாதின் வாசனையும் அத்தரின் மணமும் என் நாசியைத் துளைத்தன.

வாசத்தின் மயக்கம் தெளியுமுன் என் எதிரில் ஒரு பெண் வந்து காட்சியளித்தாள். இதை நான் எதிர்பார்க்கவில்லை. நான் எதிர்பார்த்ததெல்லாம் ஒரு அபூர்வப் பிரகிருதியை. என் யோசனையின்படி ஒரு தஞ்சை ஜில்லா சுகவாசியை! ஆனால் வந்து நின்றது நல்ல அழகும் இளமையும் சேர்ந்து கலவைச் சந்தனம்போல் மணம் வீசிய ஒரு கன்னிப் பெண். கொஞ்ச நேரம் என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை. நிலவு வெளிச்சத்தில் அவள் அங்கே நின்றது, என்னவோ கந்தர்வ லோகத்தில் அப்போதுதான் நடனமாடிவிட்டு வந்து நிற்கும் தேவகன்னிபோல இருந்தது.

கண்கொட்டாமல் அவளை நான் பார்த்துக் கொண்டிருந்தேன்.

ரொம்ப நாள் பழகியவள் போல என்னைப் பார்த்து, “நீங்கள் இங்கே குடிவந்திருக்கிறீர்களா?” என்று கேட்டாள்.

நானும், “ஆமாம், நீங்கள் இங்கே ரொம்ப நாளாக இருக்கிறீர்களோ?” என்று பொதுவாகக் கேட்டு வைத்தேன்.

அவள் மீண்டும் புன்னகை பூத்தாள். “ஏன், நீங்கள் இங்கே வரும்போது பக்கத்தில் யார் குடியிருக்கிறார்கள், எத்தனை நாளாக இருக்கிறார்கள் என்றெல்லாம் விசாரித்து வரவில்லையா? நீங்கள் கேட்காவிட்டாலும் உங்கள் வீட்டின் பெண்கள் அவசியம் விசாரித்துவிட்டுத்தானே வந்திருப்பார்கள்?” என்று

என்னையே மடக்கினுள். நான் அடக்கமாகச் சொன்னேன்:

"நான் விசாரிக்கவில்லை. என் வீட்டில் விசாரிப்பதற்குப் பெண்களே கிடையாது. நான் ஒரு பிரம்மசாரிக் கட்டை!"

இதைக் கேட்டதும் அவள், "ஓகோ. சரிதான்!" என்ருள். குரலில் அசாத்ய ஏளனம் கலந்திருந்தது. பிறகு மெல்ல, "நான் எத்தனையோ வருஷங்களுக்கு முன்னுல்—சோழர்கள் இந்த நாட்டில் ஆட்சி செய்தபோது—இருந்தேன். இப்பொழுது ஆசைப்பட்டபோ தெல்லாம் வருவேன்" என்று நிதானமாகச் சொன்னுள்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. சோழர்கள் காலமா? அட, ஈசுவரா! அப்படியானுல் இவள் என்ன, ஆவி ரூபத்திலா இப்பொழுது இங்கே வந்திருக்கிருள்? பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே! ஒரு சமயம் இவளுக்குப் பைத்தியமாயிருக்குமோ? சே, சே. அவள் கண்கள் அப்படிச் சொல்லவில்லையே; அவையல்லவா என்னைப் பைத்தியமாக்கிக் கொண்டிருந்தன! என் இதயம் பட பட வென்று துடித்தது. என்னவோ பயம் என்னைக் கவ்விப் பிடித்தது. சந்தேகத்துடன் அவள் கால்களைப் பார்த்தேன். வியப்பு இன்னும் அதிகரித்தது. அழகான பாதங்கள் தரையிலே நன்ருகத்தான் பதிந்திருந்தன.

அப்படிப் பதிந்திருந்த பாதங்களும் சாதாரணமானவையாக இல்லை. நான்



எழுத்தாளர்:—ஏன் ஸார்! என்னுடைய கதைகள் எல்லாம் எப்படி இருக்கின்றன? உங்களுடைய உண்மையான அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்.......

சிநேகிதர்:—வேண்டாம் ஸார்! நாம் இன்னும் கொஞ்ச நாளைக்குச் சிநேகிதர்களாகவே இருப்போமே!

ஆடும்போது இந்த உலகத்தையே ஆட்டி வைக்கும் பாதங்கள் அவை. எரி நட்சத்திரம் போல் பாய்ந்தோடி இடம் மாறும் பாதங்கள் அவை. கணக்கற்ற ஆண்களை அடிமைகளாக்கி வைத்திருக்கக் கூடிய பாதங்கள் அவை. நிச்சயமாக எனக்குத் தெரியும், அவை ஒரு வரம் பெற்ற நாட்டிய மாதின் பாதங்களாகத்தான் இருக்க முடியும். மிருதுவான அந்தப் பாதங்களில் சதங்கை கட்டின சுவடு அழகாகப் பதிந்திருந்தது.

வழக்கமாக நான் பெண்களைக் கண்டால் தலையைக் குனிந்து கொள்வேன். பழக ரொம்ப வெட்கப்படுவேன். அப்படியிருந்தும் காலத்தைக் கடந்து நின்ற அந்தப் பேரழகியிடம் பேசவேண்டும் என்று என் மனம் துடித்தது. அவள் கதையையும் கேட்க ஆவலாயிருந்தது.

என்னை ஒருவாறு சமாளித்துக்கொண்டு, "சோழர்கள் ஆட்சி செய்த காலம்......" என்று இழுத்தேன். அதற்குமேல் வார்த்தைகள் வரவில்லை.

அவள் படபட வென்று பேச ஆரம்பித்தாள்:

"சோழர்கள் காலம் பொற் காலம் என்று சொல்ல வந்தீர்களாக்கும்! ஏன், கற்காலம் என்று சொல்லுகிறதுதானே? கல்லாலே கோவில் கட்டி அந்தக் கல்லிலே அழகைக் கண்ட மேதைகள் அவர்கள். பொன்னைக் கல்லாக்குவதிலும் கல்லைப் பொன்னுக்குவதிலும்தான் அவர்கள் காலமெல்லாம் கழிந்தது. தஞ்சைக் கோவிலும் கங்கை கொண்ட சோழபுரமும் போதுமே!"

இதைக் கேட்டதும் எனக்குக் கொஞ்சம் சந்தேகம் எழுந்தது. உண்மையாகச் சொல்கிருளா? இல்லை, ஏளனமாகச் சொல்கிருளா என்றுல் கண்டு பிடிக்க முடியவில்லை. அவள் முகத்தைப் பார்த்தேன். நிலவொளியும் அவள் முகப் பொலிவும், ஆகா! என்னை எங்கேயோ இழுத்துச் சென்றன.

அவள் தன் கதையைச் சொன்னுள்:

## 2

"ராஜேந்திர சோழர் மகள் அம்மங்கா தேவிக்கு நான் இல்லாவிட்டாற் போது போகாது. சோழவம்சமே கலை பித்துக்கொண்டது. அதில் பிறந்த தேவி அம்மங்காவுக்கு நாட்டியத்தில் அசாத்ய பிரமை. ஆடி ஆடி என் கால்கள்கூட கன்னிப் போய்விடும். அவள் ஆசையோ 'இன்னும் ஆடு!' என்பாள். அர குடும்பத்திற்கே மற்றவர்களுடைய கஷ்டம் தெரியாது. விசித்திரமானவர்கள் அவர்கள். அவர்களில் ஒருவரைத் திருப்




செய்து நல்ல பெயர் வாங்குவதைவிட, சாதாரண மக்கள் ஆயிரம் பேரைத் திருப்தி செய்துவிடலாம்......"

இதை அவன் சொல்லும்போது என்னையறியாமல் அவனிடம் எனக்கு இரக்கம் உண்டாயிற்று.

பாவம், அவளுடைய பொன்னான பாதங்கள் எப்படி நொந்து போயிருக்கும் என்று நினைத்துப் பார்த்தேன். என் கால்கள் வலிப்பது போலிருந்தது. அப்படியே அந்தக் கைப்பிடிச் சுவரின்மேல் உட்கார்ந்து விட்டேன்.

அவள் என்னையும் இந்த உலகத்தையும் மறந்து விட்டவள் போலப் பேசிக் கொண்டிருந்தாள்.

"இளவரசி அடிக்கடி சொல்வாள், 'திலகவதி, நீ தேவகன்னி போல இருக்கிறாயடி! நீ நடனம் ஆடும்போது என்னையும் இந்தச் சோழ நாட்டையும் அப்படியே கொண்டு போய் சுவர்க்கத்தில் விட்டு விடுகிறாயடி' என்று!"

அவள் அப்போது ஆடவில்லை; உண்மைதான். ஆனால் ஆடாமலே என்னைக் கட்டி இழுத்துப்போய்ச் சுவர்க்கத்துக்கு மட்டுமல்ல; சோழ சாம்ராஜ்யத்துக்கும் அறிமுகப்படுத்தி வைத்தாள். 'திலகவதி!—நல்ல அழகான பெயர்' என்று முணுமுணுத்தேன்.

மோகினிப் பெண் கதையைச் சொல்லிக் கொண்டேயிருந்தாள். குயில் பாடினால் கேட்டதில்லை; கூவக் கேட்டிருக்கிறேன். அது அப்படியொன்றும் கவிகள் வர்ணிப்பதுபோல அத்தனை இன்பமாக இல்லை. ஆனால் அன்று அவள் குரல் எத்தனை இனிமையாயிருந்தது, தெரியுமா? அந்த மோகினிக் குயில் எத்தனை கூவினாலும் இன்பமாக இருந்தது.

இரவெல்லாம் அவள் கதை சொன்னாள். நான் கண்விழித்துக் கேட்டுக் கொண்டிருந்தேன். சலிப்பில்லை, உறக்கமில்லை. திலகவதி தொடர்ந்து கூறினாள்:

"இப்படி ஒரு நாள் நான் அம்மங்காவிடம் ஆடிக் கொண்டிருந்த போதுதான் இளவரசர் இராஜாதிராஜர் வந்தார். சகோதரியைப் பார்க்க வந்த அவர் என்னையும் பார்த்தார். நான் அழகா, என் நாட்டியம் அழகா என்று முடிவு செய்ய அவர் முயற்சித்தாரோ, என்னவோ? அதன் பலன் மறுநாள் என்னைப் பார்த்து அம்மங்காதேவி சொன்னாள். 'திலகவதி! நீ இனிமேல் இங்கே வரக் கூடாது. இளவரசர் கண்களில் படாமல் நீ எங்காவது எட்டப் போய்விடு. உன் நாட்டியம் இல்லாமல் எனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். இருந்தாலும் இது அரசாங்க விஷயம். நாளைக் காலையிலேயே நீ இந்த ஊரை விட்டுப் போய்விடவேண்டும். அது மட்டுமல்ல, நீ இனிமேல் ஆடவும் கூடாது. நீ ஆடினால் உன்னைச் சுற்றி உலகமே ஆடுகிறது. அப்போது இளவரசருக்கு நீ எங்கே இருக்கிறாய் என்பது தெரிந்துவிடும். அதற்காக நீ மறைந்துதான் இருக்க வேண்டும். அரசாங்கம் உனக்குப் பணம் கொடுக்கும். போய் வா!' என்றாள்.

"இப்படிப்பட்ட ஆதரவை நான் எதிர்பார்த்திருந்தேன். எனக்குத் தெரியும், கல்லிலே அழகைக் காண்கிறவர்களின் மனம் எப்படியிருக்கும் என்று. என்ன இருந்தாலும் நான் ஆடிப் பிழைக்கிறவள். அவரோ நாட்டை நாளை ஆளப்போகிறவர். அவர் பெயருக்கு இழுக்கு வரக்கூடாதாம்; ஆனால் நானும் என்னுடன் என் நாட்டியமும் அழிந்துபோய் விடலாமாம்!

"நான் மறுத்துப் பேசவில்லை. அஞ்ஞாதவாசம் இருக்கப் புறப்பட்டு இங்கே வந்தேன். என்னையும் என் அழகையும் இங்கே சமாதி வைத்தேன். என் நாட்டியத்தை அழிக்க மட்டும் முடியவில்லை. யார் கண்ணிலும் படாவிட்டாலும் இரவிலே இங்கே நின்று ஆடுவேன். வெறி பிடித்தவள் போல நான் ஆடுவதை மனிதர்கள் பார்ப்பதில்லை. ஆனால் வானத்திலே கிடக்கும் இந்த நட்சத்திரங்கள் பார்த்துக் கண் சிமிட்டிச் சிரிக்கும்.

"கொஞ்ச நாட்களுக்குப் பிறகு என் நாட்டிய வெறி என்னை உந்தித் தள்ள, சோழ நாட்டுக்குப் போனேன். ஏரிக் கரையில் வசந்த மண்டபத்தில் இளவரசரும் மற்றவர்களும் விழாக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு என்னைத் திடீரென்று கண்ட பிரமை மாறுமுன் நான் ஆடத் தொடங்கி விட்டேன். அதுதான் நான் கடைசியாக ஆடியது. என் வாழ்நாளின் கடைசி நாளும் அதுதான்! சுற்றிச் சுழன்று ஊழிக் கூத்தாடினேன். பயங்கரமாக ஆடினேன். என் ஆட்டத்தைக் கண்டு வெளியே வானம் குமுறியது. கடகட வென்று இடித்தது. மின்னல் வெட்டியது. ஏரிகூடப் பொங்கி யெழுந்து பிரளயமாகி விட்டது......"

## 3

இந்த இடத்தில் என் உடல் நடுங்கியது. அவள் சோகக் கதை உச்சத்தைத் தொட்டுவிட்டதை உணர்ந்தேன். என் மனக் கண் முன்னே கங்கை கொண்ட சோழ சாம்ராஜ்யம் சரிந்து விழுந்தது. உலகமே சரிந்து விழுந்து கொண்டிருந்ததுபோலத் தோன்றியது.

இன்னும் என்னவெல்லாம் சொல்வாளோ என்று ஆவலோடு அவளைப் பார்த்தேன். இத்தனையும் சொல்லிவிட்டு அவள் அழுதிருந்தால் நான் ஆச்சரியப் பட்டிருக்க மாட்டேன். ஆனால் அவள் அழவில்லை. உள்ளத்தை உருக்கும் கதையைச் சொல்லிவிட்டு அவள் கடகட வென்று சிரித்துக்கொண் டிருந்தாள். பிறகு ஆரம்பித்துவிட்டாள். ஆட்டம் என்றால் அதுதான். சோகத்திலே பிறந்த தெய்வ நடனம். என் வியப்பு நீங்கு முன் அவள் ஆடியபடியே படிக்கட்டு களில் இறங்கிப் போய்விட்டாள்.

வெகு நேரம் நான் அங்கேயே உட்கார்ந்திருந்தேன். விடிய இன்னும் கொஞ்ச நாழிகைதான் இருக்குமென்று தோன்றியது. எழுந்து வந்து பல் தலக்கி விட்டுக் காப்பி சாப்பிட வெளியே சென்றேன்.

போகும்போது வழியில் என் நண்பரைப் பார்த்தேன். "ஏன், ஸார்! பக்கத்து வீட்டில் யாரும் குடியில்லை என்று சொல்லக்கூடாதோ? பேய் நடமாட்டம் என்று ஒரு வார்த்தைகூட என்னிடம் சொல்லவில்லையே!" என்றேன்.

அவர் என்னை ஆச்சரியத்துடன் பார்த்தார். "என்ன, பேய் நடமாட்டமா? என்ன ஸார்! நீங்கள் பெண்ணையே பேயாகக் கருதுவீர்களோ? குடித்தனம் செய்யும் பேர்வழிகள் பெண்டு பிள்ளைகளோடு தாசி வீட்டுக்குப் பக்கத்தில் இருக்க மாட்டார்கள். நீங்கள் தனிக் கட்டை; 'பரவாயில்லை' என்றுதான் வைத்தேன். ஏன், திலகவதியை உங்களுக்குப் பிடிக்கவில்லையா? நல்ல நாட்டியக்காரி, ஸார்!" என்றார் அவர்.

"திலகவதியை உங்களுக்குத் தெரியுமா?" என்று வியப்புடன் கேட்டேன்.

அவர் அலட்சியமாக, "ஏன் தெரியாது? இந்த ஊரில் எல்லோருக்கும் தெரியுமே! கோவில் தாசி. எத்தனையோ காலமாக அந்த வீட்டிலேயே இருக்கிறவளாச்சே!" என்றார்.

என் நெஞ்சு படபடத்தது. கதைக்கிறவனான என்னிடமே அவள் கதை விட்டிருக்கிறாள். நாட்டியத்தில் மட்டுமல்ல, பேச்சிலும் அவள் கை தேர்ந்தவள் தான்! அத்தனையும் கதைதானா?—என்னால் நம்ப முடியவில்லை.

திரும்ப வீட்டிற்கு வந்தேன். பக்கத்து வீட்டின் வாசலில் அவள் நின்றாள். அவளுடைய மோகனச் சிரிப்பு என்னைக் கேலி செய்தது.

என் கண்களை மூடிக் கொண்டேன். சில சமயங்களில் இன்பமான கனவுகளைக் காண்பேன். அவை நிஜமாகவே நடந்திருக்கக் கூடாதா என்று ஏங்குவேன். ஆனால் நான் நேற்றுக் கண்டது நிஜமாக இருந்தாலும் வெறும் கனவாகவே இருந்திருக்கக் கூடாதா என்று நினைத்தேன். கனவிலே ஒரு பெண் வந்து கதை சொன்னால் அதிசயமில்லை; நேரில் வந்து ஏமாற்றி விட்டாளே!




# தூக்குத் தண்டனை

"'நாளைமுதல் நம்முடைய நாட்டில் தூக்குத் தண்டனையே கிடையாது' என்று நாடெங்கும் பறை சாற்றச் சொல்லுங்கள்!" என்று தன் மந்திரிகளுக்குக் கட்டளை யிட்டான் ராஜா.

"வேண்டாம், அரசே! அதனால் துஷ்டர்கள்தான் சந்தோஷமடைவார்கள்" என்று மந்திரிகள் சொன்னார்கள்.

அரசன் சிரித்தான். "நீங்கள் சொல்வது வேடிக்கையா யிருக்கிறதே! அப்படியானால் தூக்குத் தண்டனை விதிப்பதைக் கண்டு சந்தோஷம் அடைபவர்கள் எப்படி நல்லவர்களா யிருக்க முடியும்?—மதியற்ற மந்திரிகளே! போங்கள்; போய் என்னுடைய கட்டளையை உடனே நிறைவேற்றுங்கள்!" என்றான்.

வேறு வழியின்றி மந்திரிகள் அரசனுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு நிறைவேற்றி வைத்தார்கள்.

மறுநாள் வழக்கம்போல் ராஜ சபை கூடியது. காவலர்கள் யாரோ ஒருவனைக் கட்டிப் பிடித்துக்கொண்டு வந்து, "அரசே! இவன் பெயர் சுப்பன். இவன் ஏதோ விரோதத்தின் காரணமாகக் குப்பன் என்பவனை நேற்றிரவு கொலை செய்துவிட்டான்" என்றனர்.

"மன்னித்தோம்; சுப்பனை உடனே விடுதலை செய்யுங்கள்!" என்றான் அரசன் பெருமையுடன்.



அதற்கடுத்த நாள் வேறொருவனைக் கைது செய்து கொண்டு வந்து, "ராஜாதி ராஜாவே! இவன் சுப்பனால் கொலையுண்ட குப்பனின் அண்ணன். இன்று காலை இவன் தன் தம்பியைக் கொன்ற சுப்பனைக் கொன்று விட்டான்!" என்று காவலர்கள் தலை வணங்கிச் சொன்னார்கள்.

"ஓஹோ, அப்படியா?—மன்னித்தோம்; இவனையும் விடுதலை செய்யுங்கள்!" என்றான் அரசன் மீசையை முறுக்கி விட்டுக் கொண்டே.

அதற்கும் அடுத்த நாள், காவலர்கள் மற்றொருவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வந்து, "மகா ராஜா! இவன் நேற்றைய தினம் கொலையுண்ட சுப்பனின் நண்பன் சொக்கன். இவன் தன் நண்பனைக் கொன்ற குப்பனின் அண்ணனைக் கொன்று இன்று பழி தீர்த்துக் கொண்டு விட்டான்!" என்றனர்.

இது என்ன சங்கடம்? தன்னுடைய கடமையை இவர்களே ஒருவருக்கொருவர் நிறைவேற்றிக் கொள்வது என்று தீர்மானித்து விட்டார்களா, என்ன?—அரசனுக்குத் தலையை வலித்தது. அவன் ஒருகணம் யோசித்தான். மறுகணம் தன் முகத்தில் அசடு வழிய அவன் மந்திரிகளை நோக்கிச் சொன்னான்:

"என் அன்புக்குகந்த மந்திரிகளே! உங்களுடைய யோசனையை ஏற்றுக் கொள்ள மறுத்ததற்காக என்னை மன்னியுங்கள். இந்தச் சொக்கனை உடனே தூக்கிலிட வேண்டுமென்பது என் கட்டளை! அது மட்டுமல்ல; இன்று முதல் நம்முடைய நாட்டில் தூக்குத் தண்டனை மீண்டும் அமுலுக்கு வருகிறது என்றும் நாடெங்கும் பறை சாற்றச் சொல்லுங்கள்!"



இதைக் கேட்டு மந்திரிகள் திருப்தி யடையவில்லை. அவர்கள் தங்களுக்குள் கலந்து யோசித்தார்கள். கடைசியில், சஞ்சல புத்தியுள்ள ராஜாவினால் நாட்டுக்குத் தீமை உண்டாகும் என்று தீர்மானித்து, அந்த ராஜாவையே தூக்கிலே போட்டு விட்டார்கள்!

— விந்தன்

# அன்றும் இன்றும்

வேதாந்தம்

எதற்குப் பொழுதிருந்தாலும் வீட்டில் புஷ்பாவுடன் மனம் விட்டுப் பேச மட்டும் ரகுராமனுக்கு ஒரு நாளும் பொழுது இருந்ததில்லை. புஷ்பா எது பேச ஆரம்பித்தாலும் தனக்குக் கேட்க அவகாசமில்லை, அவசரமாய் வெளியே போக வேண்டுமென்று அவன் கிளம்பி விடுவான். தவறி வீட்டிலிருந்தாலோ, "நல்ல ரேடியோ புரோகிராமைக் கெடுத்து விடாதே; ஞாயிற்றுக்கிழமை யன்று உன் புரோகிராமை வைத்துக் கொள்ளலாம். நீயும் ரேடியோ கேளு; எவ்வளவு அழகாகப் பாடுகிறான்! அடா, அடா......!" என்று தாளம் போட ஆரம்பித்து விடுவான்.

காலை ஏழு மணிக்கு எழுந்திருப்பான். எட்டரை மணிக்குள் ஸ்னான பானதிகளை முடித்துக் கொண்டு சாப்பிடும் வரை ரேடியோவைத் திருகிவிட்டுக் கொண்டு உட்கார்ந்து விடுவான்.

"உலகத்தார்களைப் போல ஒரு சினிமாவா, ஒரு டிராமாவா, கடையா, கடைத் தெருவா, — உம், என்னவோ இயந்திரம் மாதிரிப் பொழுது போய்க் கொண்டிருக்கிறது. நான் ஒரு வார்த்தை பேசமாட்டேனா என்று ஏங்கித் தவித்தீர்கள் ஒரு காலத்தில். அது அந்தக் காலமாய்ப் போய் விட்டது. இப்போது!" என்று ஒரு நாள் இரவு புஷ்பா மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள். ரகுவோ வழக்கம்போல் கண்ணயர்ந்து விட்டான்!

★

ஆமாம், ரகுவுக்குப் புத்தம் புதிதாய் மணமான காலமது; கைவளையல்கள் குலுங்கும் நாதம், யாழினும் மழலையினும் மேலாக இன்ப ஒலி ஒலித்து அவனைக் குளிர வைத்த காலமது; புஷ்பா அடிக்கடி கண்ணில் படமாட்டாளா என்று ஏங்கிய காலமது; அடிக்கடி தாக மெடுத்த காலமது. அப்போது ரகுவுக்கு வயது இருபத்திரண்டு; புஷ்பாவுக்கு வயது பதினைந்து. வீட்டில் ரகுவின் தாயார், தகப்பனார், தம்பி கிட்டு முதலியவர்களுக்கு நடுவில் புஷ்பாவை அவன் பெற்றோர்கள் கொஞ்ச நாளைக்குக் கொண்டு வந்து விட்டிருந்தார்கள். புதுத் தம்பதிகள் இவ்வளவு பேர் நடுவில் எப்படி மனம் விட்டுப் பேசிக் கொள்வது? நாட்கள் உருண்டு சென்றனவே தவிர, ரகு நினைத்தபடி ஒரு வார்த்தைகூடப் புஷ்பாவிடம் பேச முடியவில்லை. இன்று எப்படியாவது ஆபீஸ் போவதற்குள் புஷ்பாவுடன் ஒருவார்த்தையாவது பேசி விடுவது என்ற நிர்மானத்துடன் அவன் ஒவ்வொரு நாளும் படுக்கையை விட்டு எழுந்திருப்பான். ஆனால் பேசத்தான் முடியாது.

"அம்மா, பாத்ரூமில் பிரஷ்ஷைக் காணுமே, யாருக்காவது தெரியுமா?" என்று கேட்டுக்கொண்டே அவன் சமையலறைப் பக்கம் போவான்.

அதற்குள் தம்பி கிட்டு குறுக்கிட்டு, "அம்மா, மன்னி வந்த பிறகு அண்ணாவுக்குக் கண்ணே தெரியவில்லை போல் இருக்கு; இதோ, வழக்கமாயிருக்கிற இடத்தில்தானே அது இருக்கு!" என்று எடுத்துக் கொடுப்பான்.

துண்டு, சோப்பு, கண்ணாடி, சீப்பு எல்லாம் தயாராய் எடுத்துக் கொடுத்து விடுவான் உலகம் தெரியாத அந்தக் குட்டிப் பயல். ரகு ஆபீஸ் போன பிற்பாடுதான் பள்ளிக்கூடத்துக்குப் போவான்.

சாப்பிடும் போதாவது இரண்டு வார்த்தைகள் — ஊஹூம், அம்மா அவனைக் கண்ணில் காட்டினால்தானே?



நீயும் ரேடியோ கேளு.........!

புஷ்பா எங்காவது கதவிடுக்கில் நின்று கொண்டு "ரகு எப்படிச் சாப்பிடுகிறான்?" என்று பார்த்துக் கொண்டிருப்பாள்.

ஒரு சமயம் பக்கத்து வீட்டு மாமிகூட, "உங்க மாட்டுப்பெண் வந்திருக்காப்பிலே இருக்கே, அவளைப் பரிமாறச் சொல்லப்படாதோ? ஏண்டா ரகு, பேசாமல் இருக்கயே, அவளைக் கூப்பிட்டுப் பரிமாறச் சொல்லுடா!" என்று பரிகாசமாய்ச் சொன்னாள்.

"அது சிறிசுதானே, என்னத்தைக் கண்டது? இலையைப் பார்த்துப் பரிமாற அவளுக்கென்ன தெரியும்? நானே பயந்துண்டு பரிமாற வேண்டியிருக்கு! ஒன்றுமில்லாததற்கெல்லாம் அவன் தாட், பூட், தஞ்சாவூர் என்று கத்துகிறான். ஊரார் வீட்டுப் பெண்ணுக்கு இதையெல்லாம் இப்போதே பிடித்தே கேட்கணும்னு தலை எழுத்தா, என்ன? கொஞ்சம் போனால் தானே ஊட்டிவிடுகிறான்!" என்று அம்மா ஆரம்பித்து விட்டாள்.

★

ஒருநாள் ரகுவுக்கு ஆபீஸில் வேலை ஓடவில்லை. எப்படிப் புஷ்பாவுடன் தனிமையில் பேசுவதென்பதை பற்றி அவன் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தான். கடைசியாக ஒரு முடிவுக்கு வந்தான். 'சரி, மத்தியானம் லீவ் போட்டு விடவேண்டியது. நேரே வீடு போய்ச் சேரவேண்டியது. வீட்டில் அப்பா வந்திருக்க மாட்டார். அம்மா கூடத்தில் தூங்கிக் கொண்டிருப்பாள். கிட்டுப் பயலும் மத்தியானம் சாப்பாட்டுக்கு வந்து விட்டுப் போயிருப்பான். அப்புறம் யார்? — நம்ப புஷ்பாதானே? சமையல் உள்ளில் அவள் ஒய்யாரமாய்ப் பத்திரிகைகளைப் படித்துக் கொண்டிருப்பாள். தனிமையில் அவள் கண்டிப்பாய் என்னுடன் பேச இஷ்டப்படுவாள்' — இப்படி எண்ணிக்கொண்டு ரகு திடும் பிரவேசமாய் வீட்டிற்குள் நுழைந்தான். எல்லாம் ரகு எதிர்பார்த்தபடி இல்லாவிடினும், அம்மா காமிரா உள்ளின் வாசற்படியில் தலை வைத்துக் கொண்டு, கூடத்துப் பக்கம் காலை நீட்டிய வண்ணம் தூங்கிக் கொண்டிருந்தாள். சமையற் கட்டில் கேளிக்கையும், இடை யிடையே பரிகாசமும் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. ரகுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கிட்டுப் பயலும் புஷ்பாவும்தான் அம்மாதிரி கொம்மாள மடிக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டு, அதற்கு முற்றுப் புள்ளி வைக்க இஷ்டப்படாதவனாய் ஓசைப்படாமல் அவர்கள் பேசுவதைக் கேட்டான்.



தென்னை மரத்தில் புல்லைத் தேடினமாதிரி......

"கிட்டு, இன்று உங்க அண்ணாவுக்கு என்ன? தெனாலிராமன் தென்னை மரத்தில் புல்லைத் தேடினமாதிரி பிரஷ்ஷைத் தேடினாரே!"

"இல்லை மன்னி, உன்னோடு பேசத்தான் இந்தக் கூத்தெல்லாம்! நீ ஏன் மன்னி பேச மாட்டேங்கறே? அவர் தேடறதுக்கு முன்னாடி நீயே எல்லாத்தையும் எடுத்துக் கொடுத்துடேன், மன்னி!"

"போ, கிட்டு! நான் அப்படியெல்லாம் செய்தால் அம்மா என்னைப் பற்றி என்ன நினைச்சுக்குவா; நான்மாட்டேன்!"

"சரி, நாழியாயிடுத்து; நான் ஸ்கூலுக்குப் போகிறேன். நீங்கள் எப்படியாவது போங்கள்!" என்று கூறிவிட்டுக் கிட்டு அங்கிருந்து ஓட்டம் பிடித்தான்.

அவன் தன்னைப் பாரத்துவிடாதபடி ரகு சத்தம் செய்யாமல் வாசற் பக்கம் பின் வாங்கினான்.

இடைக் கட்டுக் கதவைத் தாளிட வந்த புஷ்பா, ரகுவைப் பார்த்துவிட்டு மானைப் போல் மருண்டு, துள்ளிக் குதித்து உள்ளே ஓடிவிட்டாள்.

காரிருளில் ஒரு மின்னலைப் போல் தோன்றி மறைந்த புஷ்பாவைப் பின் தொடர்ந்தான் ரகு.

ஆனால் அவன் கண்ட காட்சி அவனை அப்படியே ஆச்சரியத்தில் மூழ்கடித்து விட்டது. கூடத்தில் அயர்ந்து தூங்கும் அம்மாவைப் புஷ்பா ரொம்ப சிரமப்பட்டு எழுப்பிக் கொண்டிருந்தாள். "அம்மா, உங்க பிள்ளை நல்ல வெய்யிலிலே வந்திருக்காப்போல் இருக்கு!



சட்டைக்காரர் :—இந்த ரோடு எங்கே போகிறது, தெரியுமா ?

முண்டாசுக்காரர் :—எங்கும் போகலீங்க ! எனக்குத் தெரிஞ்சு இந்த ரோடு இங்கேயே தான் இருக்குதுங்க !

புஷ்பா அவனுடைய பிடியிலிருந்து நழுவி ஓடப் பார்த்தாள். "இரு. காப்பி டம்ளரை எடுத்துக் கொண்டு போ !" என்றான் ரகு.

"உங்க தம்பி கிட்டே கொடுத்தனுப்புங்கள் !" என்று அவள் சொல்லி முடிப்பதற்குள், "இல்லே மன்னி, நான் கிரவுண்டுக்குப் போகணும், நீயே வாங்கிண்டு போ !" என்று சொல்லிக் கொண்டே ஓடிவிட்டான் போக்கிரி கிட்டு.

அந்த ஏகாந்தத்தில்தான் என்ன இனிமை! என்ன மனோகரம்! இந்த நிலைமை எப்பொழுதுமே நீடிக்க ஆசைப்பட்டான் ரகு. ஆனால் அதிக நேரம் புஷ்பாவுடன் தனித்துப் பேச முடியவில்லை.

வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டு, புஷ்பா விலகி ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த்தாள். அவள் தகப்பனார் வண்டியிலிருந்து இறங்கினார். ரகுவின் தகப்பனாரும் ஆபீஸிலிருந்து வந்து விட்டார். மறு நாள் காலை நாள் நன்றாய் இருப்பதால் புஷ்பாவை அழைத்துப் போக வந்திருப்பதாக ரகுவின் மாமனார் பேசியதிலிருந்து தெரிய வந்தது.

மறுநாள் காலை எட்டு மணிக்குப் புஷ்பாவின் குலுங்கும் வளையல்களின் ஓசை வண்டி மாடுகளின் சலங்கைச் சத்தத்தில் கலந்து மறைந்தது. கிட்டுப் பயல் கண்களில் நீர் மல்கியது. ரகு புஷ்பாவுடன் பேசிக் குலாவக் கட்டியிருந்த கோட்டைகள் தகர்ந்தன. அவன் அன்று ஆபீஸ் உண்டு என்பதையே மறந்து அப்படியே கல்லாகி விட்டான். தாயார் கூப்பிட்ட பிறகுதான் உணர்வு வந்தது.

நீர்த்தம், கீர்த்தம் ஏதாவது வேணுமோ, என்னவோ தெரியலே. எழுந்து கேட்டுப் பாருங்கள் !" என்றாள் அந்த வினயந் தெரியாத பெண்.

அம்மா அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தாள். "ஏண்டா ரகு! அதுக்குள்ளே ஆபீஸிலிருந்து வந்துட்டே? ஏதாவது உடம்புக்கு......?" என்று விசாரித்தாள்.

"ஆமாம், தலைவலி தாங்க முடியவில்லை; மத்தியானம் லீவு போட்டுவிட்டு வந்துட்டேன்" என்று முணுமுணுத்தான் ரகு.

"புஷ்பா, அடுப்பை மூட்டி ஜலத்தைப் போடு; ரகு, நீ பேசாமல் மாடியில் போய்ப் படுத்துக்கோ. நான் காப்பி போட்டுண்டு வரேன்" என்றாள் அம்மா.

"ஏன் அம்மா, நீ வரணும்? உன் மாட்டுப் பெண்ணிடமே கொடுத்தனுப்பேன் !" என்று அவன் தன் வாழ்க்கையிலேயே முதல் தடவையாக அம்மாவிடம் தைரியமாய்ச் சொல்லிவிட்டு, மாடியில் போய்ப் படுத்துக் கொண்டான்.

சற்று நேரத்திற்கெல்லாம் கடைந்தெடுத்த இரு கரங்கள் காப்பியைத் தாங்கி வந்தன. கரங்கள், கரங்களைப் பற்றின.

"ஏன், காப்பி சாப்பிடலாமே ! தலைவலி ஜாஸ்தியாகிவிடப் போகிறது !"

"சே, சே ! தலை வலியுமில்லே, ஒன்றுமில்லே. எல்லாம் உன்னுடன் சற்று..."

"......பேசத்தான் !" என்று கிட்டு குறுக்கிட்டான் மாடிப் படியிலிருந்து.

★

சீரேலென்று கண் விழித்தான் ரகு. புஷ்பா அவனை எழுப்பிக் கொண்டிருந்தாள். அவளுடைய நிஷ்களங்கமான முகம் அனுதாபத்துக் குரியதாயிருந்தது.

"ஏன், இன்று ஆபீஸ், ரேடியோ, வெளி ஜோலி, ஒன்றுமே கிடையாதா? தூங்கிவிட்டீர்களே !" என்றாள் புஷ்பா.

"ஆமாம் புஷ்பா, இன்று உனக்காக அவைகளுக்கெல்லாம் லீவு கொடுத்து விட்டேன்" என்றான் ரகு பரிவுடன்.

அன்று சினிமாவுக்குப் போன தம்பதிகள் இருவரும் பக்கத்தில் இருப்பவர்களைப் பற்றித் துளிக்கூடக் கவலைப்படாமல் பேசித் தீர்த்து விட்டார்கள் !

# சுழல் விளக்கு

## வேம்பு

ராமநாதன் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். மனதிலே நிம்மதியில்லா திருக்கும்போது கயிறறுப்பட்ட மாடுபோல் அது இஷ்டப் பிரகாரம் உலாவும்; கடந்தகால நினைவுகளையும் எதிர்கால எண்ணங்களையும் வாரிப் போட்டுக் கொண்டு திண்டாடும். அந்த நிலையில் இடையிடையே இன்ப நினைவு வந்தாலும், கொந்தளிப்பு அதை அமுக்கி விடும்.

வீட்டில் விளக்குக்கூட ஏற்றவில்லை. அவன் உட்கார்ந்திருந்த ஜன்னல் வழியே வெளியே பார்த்தால் தூரத்தே மங்கி மங்கி ஒளி பெற்றுச் சுழலும் 'லைட் ஹவுஸ்' தெரியும். ஏறக் குறைய அந்தச் சுழல் விளக்கைப் போலத்தான் அவன் உள்ளமும் இருந்தது.

அவள் பிறந்த வீட்டுக்குப் போய் இன்றைக்குப் பத்து நாட்களாகிவிட்டன. வைராக்கியம் வைரம் போல் அவன் மனதில் உறுதியாக இருந்தது.

அப்படித்தான் அவன் என்ன கேட்டு விட்டான்? ஐந்தாண்டு பழகிய அவளுக்கு, அவனது சுக துக்கங்களில் சமமாகப் பங்கு கொண்டு விட்ட அவளுக்கு, அது கூடச் சொல்ல உரிமையில்லையா?

“இல்லை” என்ற முரட்டுத்தனமான எண்ணத்தில்தான் அவன் மனம் பெரும் போராட்டத்தை எழுப்பி, அவளையும் பிறந்த வீட்டுக்குப் போகச் செய்தது.

★

ராமநாதன் இப்பொழுது சாதாரண கம்பெனி ஒன்றில் அறுபது ரூபாய் 'அலவன்ஸ்' உட்பட வள்ளிசாக வாங்கிக் கொண்டு வேலையிலிருந்தான். அவன் இதற்கு முன்பு மிலிடெரி இலாகா ஒன்றில் மாதம் ரூபாய் இருநூறுக்குக் குறையாமல் வாங்கிக் கொண்டிருந்தான். அவனது அழகுக்கும், சம்பளத்துக்குமாகப் பார்த்தே அன்னபூரணியை அவளது பெற்றோர் அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள். அதுவரையில் இரண்டு சகோதரர்களுடனும் தாயாருடனும் இருந்த அவன், கலியாணமான மூன்றாவது மாதமே தனிக் குடித்தனம் போகும்படி நேரிட்டது. அவளாக வேண்டுமென்று—புது ஜோரில்—தனிக் குடித்தனம் போகவில்லை யானாலும், ஆபீஸ் போய் வர மிகவும் சுலபமாக இருக்குமே என்று பல்லாவரத்தை விட்டு மயிலாப்பூர் வந்து சேர்ந்தான்.

அன்னபூரணிக்கு அடக்க முடியாத சந்தோஷம். இரண்டு ஓரகத்திகளுடனும் மாமியாருடனும் இனிமேல் குடித்தனம் நடத்த வேண்டியதில்லையல்லவா?

ஆனால் இவ்வளவு நாள் ஒன்றாக இருந்து, சம்பளத்தையெல்லாம் ஒன்றாகக் கொடுத்து, மொத்தமாகச் செலவு செய்த அந்தக் குடும்பத்துக்கு, இப்பொழுது ஒருவன் பிரிந்து போனதால் செலவுக்குச் சற்று இழப்புதான். இருந்தாலும் ராமநாதன், “என்ன, சொத்தையா பிரித்துக் கொண்டு போய் விட்டேன்? என்னுடைய சௌகரியத்துக்காகத்தானே போனேன்? மாதம் முப்பது ரூபாய் வேண்டுமானால் உனக்குக் கொடுத்து விடுகிறேன். அம்மா! அதை அப்படியே பாங்கியில் போட்டு வா!” என்று கூறியதும், அவன் தாயாருக்கு ஒரே மகிழ்ச்சி.

ராமநாதன்—அன்னபூரணி வாழ்க்கை இன்பக் கடலில் மிதந்து கொண்டிருந்தது. அன்பின் அறிகுறியாக அடுத்த வருஷமே கண்ணம்மாவும் பிறந்தாள். அவள் பிறந்த ராசியோ என்னமோ, யுத்தம் முடிந்தது. மறு வருஷம் யுத்த இலாக்காவுடன் சம்மந்தப்பட்ட சிறு சிறு தொழிற்சாலைகளை மூடினார்கள். அதில் வேலை செய்து வந்தவர்கள் மூன்று மாதச் சம்பளத்துடன் வீட்டிற்கு அனுப்பப் பட்டார்கள்.

வானக் கடலில் இன்ப விமானத்தில் மிதந்து கொண்டிருந்த ராமநாதனுடைய விமானம், நெடிதுயர்ந்த மலையில் மோதியது போலாகியது. சொல்ல முடியாத வேதனை அவன் இதயத்தை அமுக்கியது. வேலை போன விஷயத்தை அவன் வெளியில் சொல்லவேயில்லை. மூன்று மாதச் சம்பளம் கையிலிருந்தது. ஏற்கெனவே சேர்த்து வைத்திருந்த பணமும் கொஞ்சமிருந்தது. தாயாரிடம் ரூபாய் ஐந்நூறாவது இருக்கும்...அதையும் வாங்கிக் கொண்டால்....?

ஒருநாள் ராமநாதன் அன்னபூரணியுடன் பல்லாவரத்துக்குக் கிளம்பிச் சென்றான். அவளுக்கும் கணவருக்கு வேலை போன விஷயம் தெரியாது. நீண்ட நாட்களுக்குப் பிறகு தன் பிள்ளை, மாட்டுப் பெண்ணுடன் வந்ததைக் கண்டு சந்தோஷமடைந்தாள் தாயார். என்று



னும் தன் பிள்ளையைத் தனிக் குடித்தனம் வைத்து, சம்பளம் இருநூறு ரூபாயில் இங்கு கொடுக்கும் முப்பது ரூபாய் போக மீதியை 'ஊதச்' செலவு செய்பவள் அன்னபூரணி என்ற எண்ணம் தோன்றியவுடன் அவள் பெயரில் அவளுக்கு ஒருவிதக் கசப்பு ஏற்பட்டது.

சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு, ராமநாதன் அம்மாவைத் தனியே அழைத்து, "பாங்கியில் போட்டு வைத்திருக்கும் பணத்தை என்னிடம் கொடு!" என்றான். இதைக் கேட்டதும் அவன் தாயாருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. தன்னுடைய நாட்டுப் பெண்ணின் மீது ஏற்கனவே இருந்த ஆக்ரோஷம் இன்னும் அதிகமாகியது. "நன்னாயிருக்கேடா, நீ கேட்கிறது! எங்கேயாவது ரூபாய் அப்படியே பாங்கியிலே இருக்குமாடா? உனக்கு எதுக்குடா பணம்? 'தாம், தூம்'னு செலவு செய்யறியோ? உனக்கு ஒரு தங்கையிருக்கா, அவளைக் கலியாணம் செய்து கொடுத்திருக்கு. ஆடி, ஆறுமாதம் இதுக்கெல்லாம் பணம் வேண்டாமா? அம்மா எங்கே போவாள்? சம்பந்தி வீட்டிலே வெள்ளிக் கூஜாவும், பன்னீர்ச் செம்பும், பட்டு வேஷ்டியும் வேணுமென்றார்கள். என்ன செய்வது? பொண்ணு இங்கேயே இருக்க முடியுமா? எல்லாச் சம்பந்தியும் என்னைப் போலவே நல்லவர்களாக இருந்து விடுவார்களா? உன் அகமுடையானை அதைக் கொண்டா, இதைக் கொண்டா என்று நான் கேட்காமலிருந்தது போல் அவர்களும் சும்மா யிருப்பார்களா? அந்தப் பணத்திலேயிருந்து எடுத்துத்தான் எல்லாம் செய்தேன்!" என்று அம்மா பொரிந்து தள்ளி விட்டாள்.

ராமநாதன் பல்லைக் கடித்துக் கொண்டான். கணவரும், மாமியாரும் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை அன்னபூரணி ஒட்டுக் கேட்டாள். 'உன் அகமுடையானை அதைக் கொண்டா, இதைக் கொண்டா என்று நான் கேட்டேனா?' என்று அவள் சொல்லும்போது இவளுக்குச் 'சொரேர்' என்றது. 'ஐயோ! நான் ஒன்றும் கொண்டு வரவில்லையாமே? எவ்வளவு சுலபமாகச் சொல்லி விட்டாள்!' என்று நினைப்பதற்குள், கணவர் தான் சேர்த்துவைத்திருந்த பணத்தைக் கேட்டதும், அவள் செலவாகிவிட்டது என்று கூறியதும் அவளை ஆத்திரம் அடையச் செய்தது. தன்னிடம் கூடத் தெரிவிக்காமல் அவளிடம் பணம் சேர்த்து வைத்திருக்கிறார் என்ற கோபம் வேறு அத்துடன் சேர்ந்து கொண்டது.

நல்லவேளையாக ராமநாதன் உடனே வீட்டுக்குக் கிளம்பிவிட்டான்.

கணவரை என்னவெல்லாமோ கேட்க வேண்டும் என்று துடித்தாள் அன்னபூரணி. ராமநாதனோ ஆத்திரம் தாண்டவமாடும் முகத்துடன் சாப்பிட்டுவிட்டுப் படுத்து விட்டான்.

சேர்த்துவைத்த பணமெல்லாம் செலவானதற்கும், ராமநாதனுக்கு ஒரு கம்பெனியில் குமாஸ்தா வேலை கிடைப்பதற்கும் சரியாக இருந்தது. வீட்டில் செலவுகள் குறைக்கப்பட்டன. இதனால் எடுத்ததற்கெல்லாம் ஆத்திரம் பொத்துக்கொண்டு வந்தது.

அன்னபூரணிக்கு இது கொஞ்சம் சிரமமாயிருந்தாலும் ரொம்பவும் சாமர்த்தியமாக நடந்து கொண்டாள்.

இதன் நடுவில் அவன் மாமியார் ஒரு நாள் வந்திருந்தாள். அன்றுதான் போராட்டம் ஆரம்பமாகியது. ராமநாதனின் தாயார் பேச்சு வாக்கில், தாங்கள் கஷ்டப்படுவதால் ராமநாதன் குடும்பத்தோடு குடும்பமாக வந்துவிட்டால் எவ்வளவோ நல்லதென்று கூறினாள். அன்னபூரணி பதிலுக்குத் தாங்களும் கஷ்டப்படுவதையும், ஒருவேளை காப்பி நிறுத்தப் பட்டதையும், டிபன் கிடையவே கிடையாதென்பதையும், ஒரு சினிமா, டிராமாகூடப் போவதில்லை என்பதையும் படபடவென்று கொட்டித் தீர்த்தாள்.

அன்று இரவு ராமநாதன் வழக்கம் போல ஆபீஸிலிருந்து வந்தான். வந்தவுடனே களையிழந்த வீட்டையும், முகத்தைத் தூக்கிக்கொண்டு நிற்கும் மனைவியையும் காண அவனுக்குக் கோப மூண்

டாகியது. அலுத்துப் போன உள்ளத்துக்கு ஆத்திரம் வருவது இயற்கைதானே?

"அம்மா வந்திருந்தார்; சண்டை போட்டார்; போய் விட்டார்!" என்றாள் அன்னபூரணி. அவனிடமிருந்து பதில் வருவதற்குள், "நீங்கள் கொடுத்திருந்த ஐந்நூறு ரூபாய் போதாதென்று குடும்பத்தையும் ஒன்றாக்க வேண்டுமாம்!" என்றாள்.

ராமநாதன் மௌனமாக இருந்தான்.

"என்னிடம்கூடச் சொல்லாமல் பணத்தை அம்மாவிடம் சேர்த்து வைத்திருந்தீர்கள். அதை எடுத்து அவர் தம் பெண்ணுக்குக் கொடுத்து விட்டார். கடைசியில் எனக்குக் கெட்டவள், குடும்பத்தைக் கலைத்தவள் என்று பெயர் வந்து விட்டது" என்றாள்.

பொறுமை யிழந்த ராமநாதன், "போதுமே, உன்னுடைய அங்கலாய்ப்பு!" என்றான்.

"ஆமாம், நான்தான் அங்கலாய்க்கிறேன்! என்ன, நான் சீர், செனத்தி கொண்டு வராதவள். எனக்கும் ஒரு அண்ணா இருந்து, அவன் மனைவி கொண்டு வந்து கொடுத்தால், எங்கம்மாவும்தான் தூக்கிக் கொடுத்திருப்பாள்!" என்றாள் அன்னபூரணி.

ராமநாதனின் கோபம் உச்சஸ்தாயியை அடைந்தது. 'பளார்' என்று ஓர் அறை அன்னபூரணியின் கன்னத்தில் விழுந்தது. "நீ யார்? அப்படித்தான் கொடுப்பாள், அம்மா!" என்றான் அவன்.

அவ்வளவுதான்; அன்று இரவு பூராவும் விம்மலும் அழுகையும்தான். காலையிலும் அழுதழுது முகம் சிவந்து விட்டது.

"இப்படி மூதேவிபோல் முகத்தைத் தூக்கிக் கொண்டிருப்பதை விடப் பிறந்த வீட்டுக்குத்தான் தொலைந்து போயேன்!" என்று கத்தினான் ராமநாதன்.

"பேஷாய்ப் போகிறேன்!" என்றாள் அன்னபூரணி.

இது ராமநாதனை அடங்கா ஆத்திரம் அடையச் செய்தது. "சரி, இன்று சாயங்காலமே கொண்டு போய் உன்னை விட்டு விடுகிறேன்" என்று அவன் சொல்லி விட்டான். அப்படியே கொண்டு போய் விடவும் விட்டுவிட்டான்.

★

ஒரு மாதம் உருண்டோடிச் சென்றது. அன்னபூரணிக்குப் பிறந்த வீட்டில் இருப்பே கொள்ளவில்லை. மற்றொன்று அவள் உள்ளத்தை அப்படியே மாற்றி விட்டது. வாஸ்தவத்திலேயே தன் அண்ணாதான் தனக்கு எல்லாச் செலவுகளையும் செய்திருக்கிறான் என்பதை அறிந்தபோது, தான் ஆத்திரம் கொண்டது தவறு என்றே அவளுக்குப் பட்டது. உடனே தன் கணவனுக்கு அவள் ஒரு கடிதம் எழுதினாள்.

அவளிடமிருந்து கடிதம் வந்தது முதல் ராமநாதனின் மனம் கலங்கிற்று. கோபத்தில் அவளை ஊருக்கு அனுப்பியது தவறு என்பதை அவனும் உணர்ந்தான். அதே சமயத்தில் ஜன்னலுக்கு வெளியே தெரிந்த சுழல் விளக்கு பளிச்சுப் பளிச்சென்று அடித்து ஆடிக்கொரு தரம் மறைந்து கொண்டிருந்தது.

"ராமநாதா!" என்று கூப்பிட்டுக் கொண்டே யாரோ மாடிப் படியில் ஏறி வந்தார்கள். "என்னடா, இது! அவளை ஊருக்கு அனுப்பி விட்டு இப்படி இருட்டில் உட்கார்ந்திருக்கிறாயே! செலவுக்குப் பணம் போதவில்லை என்றால் என்னைக் கேட்கக்கூடாதோ? இன்றுதான் அம்மா எனக்கு எல்லா விஷயத்தையும் சொன்னாள். குடும்பம் என்றால் இருளும் ஒளியுமாகத்தான் இருக்கும். அதை யாராலும் புரிந்து கொள்ளவே முடியாது. பார்க்கப் போனால், எல்லாக் கஷ்டங்களுக்கும் காரணம் என்ன தெரியுமா?—பணந்தான்! பணம் இருந்தால் எல்லாவற்றையும் சரிக்கட்டிக்கொண்டு போய் விடலாம். ஒருவர் மேல் ஒருவர் எரிந்து விழ வேண்டிய அவசியமே இருக்காது. இந்தா, நூறு ரூபாய்! ஏதாவது கடனிருந்தால் அடைத்து விடு!" என்றார் அவனுடைய அண்ணா.

'குடும்பம் என்றால் இருளும் ஒளியுமாகத்தான் இருக்கும்' என்று அண்ணா கூறியது ராமநாதனின் காதில் விழுந்தது. அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். அடுத்த நிமிஷம் கையிலிருந்த பத்துப் பத்து ரூபாய் நோட்டுகள் அவன் கவனத்தைக் கவர்ந்தன.

'அண்ணாவுக்கு மட்டும் இதைக் கொடுக்க வேண்டும் என்று கடமையா, என்ன? அவர் வாழ்க்கையைப் புரிந்து கொண்டவர்; அதனால் சமயத்தில் தானே உணர்ந்து கொடுத்தார்!' என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன.

அவ்வளவுதான்; அவன் மேஜையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து உடனே மாமனாருக்குக் கடிதம் எழுதினான். எழுதி முடித்ததும் ஏதோ இருள் விலகியது போன்ற ஒரு உணர்ச்சி அவன் உள்ளத்தில் தோன்றிற்று.

நெற்றியில் துளித்த வியர்வையைத் துடைத்து விட்டு ஜன்னல் வழியே வெளியே பார்த்தான்.

சுழல் விளக்கு அவன் வாழ்க்கையைப் போலவே சுழன்று கொண்டிருந்தது!




ரேஷன் கடைக்காரர்:- "இந்த சர்க்கார் போக்கே எனக்குக் கொஞ்சமும் பிடிக்கலீங்க. உணவைப் பெருக்கணுங்கறாங்க. உணவைப் பெருக்கினால் அபராதம் போடறாங்க."
அன்பர்:- "அப்படியா? நீங்க என்ன பண்ணீங்க உணவைப் பெருக்க?"
ரே.காரர்:- கொஞ்சம் கல்லும் மண்ணும் சேர்த்து இருமூட்டை அரிசியை நூ மூட்டையாக்கினேன்!"

பரிமாறுகிறவர்:- "ரஜம்! ரஜம்!! ரஜம்!!!
சாப்பிடுபவர்:- "ஓய்! அதென்னய்யா ரஜம்? ரஸம்னு நன்றாகச் சொல்லுமே!"
பரிமாறுகிறவர்:- "இல்லே ஸார், இன்றைக்கு ரஸம் அவ்வாறு 'ஜம்' மென்று அமைந்திருக்கு ஸார........!

"முதல்காக்கை:- ஏற்றமாக எல்லோரும் கும்பலாக அந்த பையனோடு தொடர்ந்து போகிறார்களே? இரண்டாம் காக்கை:- "அந்தப் பையன் பாஸ் ஆனதற்குக் கோவிலிலே தேங்காய் உடைக்கப்போகிறான். அதைப் பொறுக்கத்தான்."

"என்ன சடையா? எங்கே கிளம்பி விட்டாய்?"
"கொஞ்சம் இரு புள்ளிக்கருப்பா! இந்தக் கிழத்தைக் கொஞ்சம் நீச்சு வரை இழுத்துக் கொண்டு போய் விட்டு வந்து விடுகிறேன்!"

"சங்கீதசிம்மம்னு பட்டம் தொங்குகிறதே உமக்கு... தொழில் சரியாக நடக்கவில்லை என்கிறீரே!"
"அதுதான் ஸார், சங்கடமாய்ப் போச்சு. எல்லோரும் என்னை கச்சேரிக்குக் கூப்பிட பயப்படுகிறார்கள்..!"



# காலக்ஷேபம்

### ஓய்வு !

"ஓய், அடுத்த வீட்டுக்காரரே! உம்முடைய கிராமபோன் பெட்டியை இன்று மாத்திரம் கொஞ்சம் இரவல் கொடுக்க முடியுமா?"

"ஆகா! தருகிறேன். யாராவது சினேகிதர்கள் வருகிறார்களா?"

"இல்லை; இன்றைக்கு லீவு எடுத்துக்கொண்டிருக்கிறேன். கொஞ்சம் நிம்மதியாக ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்று உத்தேசித்திருக்கிறேன்!"

★

### அவர் வார்த்தை

வந்தவர் :—நிச்சயமாக மானேஜர் ஊருக்குப் போயிருக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா?

ஆபீஸ் குமாஸ்தா :—அவர் வார்த்தையிலேயே உங்களுக்கு நம்பிக்கையில்லையா?

★

### உண்மையா ?

நீதிபதி :—உமது வழக்கு என்ன?

வாதி :—பிரதிவாதி என்னை அயோக்கியன் என்று வைதான்.

நீதிபதி :—அவன் சொன்னது உண்மையா?

வாதி :—சந்தேகமில்லாமல்.

நீதிபதி :—அப்படியானால் ஏன் மான நஷ்ட வழக்கு தொடுக்கிறீர்?

★

### உதவி

அப்பா :—ராமு, நான் ஜன்னல் வழியாகப் பார்த்தேன்; நீ பக்கத்து வீட்டுச் சோமுவோடு கட்டிப்பிடித்து விளையாடினாய். பிறகு அவனுடைய காணாமற் போன கோலிகளை எடுத்து அவன் கையில் கொடுத்தாய். அப்படித்தான் பிறருக்கு உதவி செய்ய வேண்டும். ரொம்ப சந்தோஷம்.

ராமு :—இல்லை, அப்பா! அவை கோலிகள் அல்ல. எனக்கும் சோமுவுக்கும் ஏற்பட்ட சண்டையில் அவனை நான் பலமாக முகத்தில் குத்தி விட்டேன். அப்போது கீழே விழுந்த அவனுடைய பற்களைத்தான் தேடி எடுத்து அவனிடம் கொடுத்தேன்!

### மறதிக் குழப்பம்

அவர் (ஞாபகமறதிக்காரர்) :—உங்களைப் பார்த்ததில் ரொம்ப சந்தோஷம். நாளைக்கு என் வீட்டில் நடக்கும் விருந்துக்கு நீங்கள் அவசியம் வர வேண்டும். நமச்சிவாயம்கூட வருகிறார். நான் அவரிடம் நேரில் சொல்லி விட்டேன்.

இவர் :—ரொம்ப சந்தோஷம். ஆனால் நான்தான் நமச்சிவாயம்!

அவர் :—அடாடா! என்ன மறதி பாருங்கள்! அவரும் வரட்டும், நீங்களும் வாருங்கள்!

★

### சரிதான் !

"எனக்குப் பத்து மாசத்திலேயே என் பெற்றோர்கள் இறந்து விட்டனர். அதிலிருந்து நானே கஷ்டப்பட்டு முன்னுக்கு வந்திருக்கிறேன்."

"நீ பத்து மாசத்தில் குழந்தையாயிருந்திருப்பாயே! அப்போது என்ன பண்ணினாய்?"

"குழந்தைக் காட்சிக்குப் போய் முதல் பரிசு வாங்கினேன்!"

★

### கல்யாணம் முடிந்தது

"போன மாதம் கல்யாணம் நடந்ததே, அந்த இளங் காதலர்களுக்கு! அவர்கள் இப்போது சந்தோஷமாயிருக்கிறார்களா?"



"இல்லை; அவர்கள் கல்யாணத்துக்கு வரவேண்டிய வாழ்த்துத் தந்தி ஒன்று தாமதமாக வந்தது. அந்த வாழ்த்தை ஏற்றுக் கொள்ள இருவரும் தயாராயில்லை. தந்தியை வாங்க மறுத்து விட்டார்கள்!"

# நரிக்காட்டு ராஜா

ஆசிரியர்: எஸ். கோபாலன் மொழிபெயர்ப்பு: எஸ். வி. எஸ்.

## 16. நீ யார்?

நல்ல நரிக்காட்டின் தற்போதைய ஜமீன்தாரின் தந்தை தம் சொந்த முயற்சியில் முன்னுக்கு வந்தவர்; ஜமீன்தார் ஆனவர். அவர் தம் வாழ்நாளில் எத்தனையோ கஷ்டங்களை அனுபவித்திருக்கிறார். எத்தனையோ துன்பங்களைப் பொறுமையுடன் ஏற்றிருக்கிறார். எத்தனையோ நாட்கள் ஒரு வாய் சோறும் கிடையாமல் வயிற்றில் ஈரத்துணியைப் போட்டுக் கொண்டு பொழுதைப் போக்கியிருக்கிறார். அதிர்ஷ்ட தேவதையின் புன்முறுவல் பெறுவதற்கு முன் அவர் பட்ட கஷ்டங்களைச் சொல்லித் தொலையாது. ஏன், இத்தகைய துன்பங்களில் உழன்று உணர்ச்சிகள் எல்லாம் மரத்துப் போய் அதிர்ஷ்ட தேவதை முறுவலித்த போது, அந்த முறுவலை உணரக்கூட முடியாதவராய் இருந்தார்.

கிராமத்திலிருந்த பெரிய மனிதர்களுக்காக அக்கம் பக்கத்து ஊர்களுக்குத் தூது போவார். அவர்கள் திருப்தியடைந்து ஏதாகிலும் இரண்டு காசு தருவார்கள் அதில் பிழைத்து வந்தார். அந்தப் பிழைப்பும் அலுத்து விட்டது. அவருக்குத் தாயார் இருந்தார். அந்த தாயைக் காப்பாற்றக்கூடிய நிலையில் அவர் இல்லை. பசிக் கொடுமையில் இறந்து விட்டார்; தாயின் சாவு அவருக்கு இரக்கமற்ற உலகின்மீது ஒரே வெறுப்பை யுண்டாக்கி விட்டது. அந்த வெறுப்பில் இலங்கையில் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யும் கூலியாகத் தன்னையும் பதிவு செய்து கொண்டார்.

இந்த நாள்தான் அதிர்ஷ்ட காலம் ஆரம்பிக்கும் நன்னாள் என்பது அவருக்கு தெரியவில்லை, பாவம்! இரண்டு வருஷம் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்தார். தேயிலைத் தோட்டத்தின் முதலாளியான ஒரு ஐரோப்பியர் அவரை ரொம்பவும் யோக்கியமானவர், ரொம்பவும் நல்ல வேலையாள் என்பதைக் கண்டார். அந்த மகிழ்ச்சியில் அவரைக் கங்காணியாக நியமித்தார். அப்போதுதான் தமக்கு நல்ல காலம் பிறக்க ஆரம்பித்திருப்பதாக உணர்ந்தார்.

சில வருஷங்கள் கங்காணியாக வேலை பார்த்து, நிறைய பணத்தைச் சேர்த்துக் கொண்டு ஊருக்குத் திரும்பினார். ஊரில் பெரிய ஜமீனை விலைக்கு வாங்கி நல்ல நரிக்காட்டின் முதல் ஜமீன்தார் ஆனார்.

நாம் ஏற்கெனவே இக் கதையில் சந்தித்த இரண்டாவது ஜமீன்தார் சுகப்பிரியர். ஜமீன்தாராகப் பிறந்தவர்; ஜமீன்தாராக வாழ்ந்தவர். உயிர்வாழ வேலை செய்தாக வேண்டும் என்ற அவசியமிருக்கவில்லை. ஆனால் ஒரு காரியம் மட்டும் அவர் செய்தாக வேண்டியிருந்தது. அது தம் கடமை என்று எண்ணினார்.

அவர் தகப்பனார் சாகுந்தறுவாயில், ஒரு வாக்குமூலம் வாங்கிக்கொண்டார். அதன்படி வருஷம் தவறாமல் இலங்கைக்குச் சென்று அங்குள்ள ஆஸ்தி பாஸ்திகளை மேற்பார்வை பார்த்துவிட்டு வர வேண்டியிருந்தது. அங்கிருந்த காரியஸ்தர்களின் மூலம் வருஷம் தவறாமல் அவருக்குச் சேர வேண்டிய வருமானம் வந்து கொண்டிருந்தது. அதனால் வசூலுக்காக தான் போய்த்தான் ஆகவேண்டும் என்ற நிர்ப்பந்தமிருக்கவில்லை. எனினும் தமது தந்தையின் கடைசி விருப்பத்தை மதித்து இலங்கைக்குப் போய் வருவார்.

அந்த வழக்கப்படி இவ்வருஷமும் இலங்கைக்குப் பிரயாணமானார். இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸில் இரண்டாம் வகுப்பில் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். ஜன்னல் வழியாக வெளியில் வயல்களும் வரப்புகளும் சுழன்று சுழன்று செல்வதைப் பார்த்தார். அதே சமயத்தில் அவர் மனதிலும், தம் தந்தை வருஷம் தவறாமல் இலங்கைக்குத் தாம் போய்வர வேண்டும் என்று ஏன் நிர்ப்பந்தப்படுத்தினார்? என்ற கேள்வி சுழன்று சுழன்று வந்து கொண்டிருந்தது. ஆனால் அவரைப் பொருத்தவரையில் இலங்கைக்குப் போய் வருவது எவ்வளவோ பிடித்திருந்தது. பலவித இயற்கைக்காட்சிகளும் மக்களும் நிறைந்த அந்த அழகிய இலங்கைத் தீவு ஒரு மோகினித் தீவாகத் தோன்றியது. 'பின்சிராப் போல் இனப்'பு இருந்தும் சாரமற்று இருந்த நல்ல நரிக்காட்டு வாழ்க்கை, எட்டுக் கோட்டை வாழ்க்கைக்கு முற்றிலும் மாறுபட்ட எவ்வளவு ரஸமான வாழ்க்கை இந்த இலங்கை வாழ்க்கை என்று எண்ணினார். கொழும்பில் அவர் தந்தை கட்டிய பிரம்மாண்டமான வீடு அழகாக இருக்கும்.

மேல் காட்டினர். எல்லாம் அதைக் கண்டு பாராட்டியிருக்கின்றனர். வருஷந்தோறும இலங்கைக்குச் செல்வதில் அவருக்கு உற்சாக மூட்டிய விஷயங்களில் இந்த மாளிகையும் ஒன்று.

அவர் ஏறியிருந்த இன்டோ ஸிலோன் எக்ஸ்பிரஸ் கொழும்பு கோட்டை ஸ்டேஷன் போய்ச் சேருமுன், அவர் மனம் ஸ்டேஷனுக்குப் போய் விட்டது. அங்கே ஸ்டேஷனில் வேலைக்காரர்கள் பிளாட்பாரத்தில் தம்மைத் திருப்தி பண்ண மேலும் கீழும் ஓடும் காட்சி அவர் கண் முன் வந்தது. இவையெல்லாம் நினைத்துப் பார்த்தவுடன் தம் தந்தைக்கு வாக்களித்த வாக்கு இத்தனை நாள் நிறைவேற்றியதை விட இன்னும் சிரத்தையுடன் நிறைவேற்ற வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது.

சூரியன் மலைவாயில் மறையு முன் ரெயில் தனுஷ்கோடியை அடைந்தது. அவர் தம் பெட்டியை விட்டு இறங்கிய போது, தம் பெட்டியை அடுத்திருந்த இரண்டாம் வகுப்புப் பெட்டியில் வந்தவன் ஒரு சிறுவன் என்பதைக் கண்டவுடன் அவருக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. அதே சமயம் ஸ்டேஷன் மாஸ்டரும், அழுக்குடை அணிந்த சிறுவன் மேல் வகுப்பில் பிரயாணம் செய்து வந்ததைப்பார்த்தவுடன் ஆச்சரியமடைந்தார். அவனிடம் நெருங்கி டிக்கெட் கேட்டார். சிறுவன் அலட்சியமாகத் தன் டிக்கெட்டைக் காண்பித்தான். ஜமீன்தாரும் ஸ்டேஷன் மாஸ்டரும் அவன் வைத்திருந்த இரண்டாவது வகுப்பு டிக்கெட்டைக் கண்டு திகைத்தனர்.

"எங்கே போகிறாய்?" என்று கேட்டார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"இலங்கைக்கு" என்றான் சிறுவன்.

"அப்படியானால் நீ இங்கே இறங்க வேண்டும். அதோ அங்கே எழுதி இருக்கும் பலகையைப் பார்க்கவில்லையா? இது தான் தனுஷ்கோடி."

"ஆமாம்; தனுஷ்கோடியில் இறங்க வேண்டும் என்றுதான் சொன்னார்கள்" என்று சொல்லிக்கொண்டே இறங்கினான்.

அன்று மாலையே தலை மன்னாருக்குப் போகும் 'கோஷன்' என்ற கப்பலில் ஏறியிருந்தார் ஜமீன்தார். அந்தக் கப்பலில் தன்னுடன் பிரயாணம் செய்யும் பிரயாணி அதே சிறுவன்தான் என்பதைக் கண்டு பிரமித்துப் போனார்.

ஜமீன்தார் அவனைப் பார்த்து, "உனக்குச் சரியான டிக்கெட் கொடுத்திருக்கிறார்கள் என்பது நிச்சயமாகத் தெரியுமா? வேண்டுமானால் இன்னொரு தரம் பார்த்துக் கொள்" என்றார்.

"உங்கள் டிக்கெட் விஷயத்தில் உங்களுக் கொன்றும் சந்தேகமில்லையே" என்று சாந்தமாக பதில் சொன்னான்.

"நீ எங்கிருந்து வருகிறாய்?"

"நல்ல நரிக்காட்டிலிருந்து."

"என்ன! நீ அங்கேயிருந்துதான் நேரே வருகிறாயா?" என்று வியப்புடன் கேட்டார்.

"ஆமாம்."

"உன் பெயர் என்ன அப்பா?" என்று ரொம்பவும் கனிவுடன் கேட்டார் பையனின் அழுத்தலைக் கண்டு வியந்து.

"'மாது' என்று என்னை அழைக்கிறார்கள். ஆனால் என் நிஜப் பெயர் மாதவன்."

இம் மொழிகள் ஜமீன்தாரைத் தூக்கி வாரிப் போட்டன. அவருக்குப் பயமும் ஏற்பட்டு விட்டது. அவரைப் பொறுத்த வரையில் மாது என்ற பெயர் நரிகளுடனேயே சம்பந்தப் பட்டிருந்தது. இது வரையில் அவனை ஒரு தடவை கூடப் பார்த்ததில்லை என்றாலும், அவனை ஒரு பயங்கர அருவருக்கும் உருவமாகக் கற்பனை செய்திருந்தார். இப்பொழுது நேரில் பார்த்த பிறகு, மாது எல்லாச் சிறுவர்களைப் போலிருப்பதைக் கண்டார். இருந்தாலும், மாது மறுபடியும் ஏதாகிலும் விஷமம் செய்வான் என்றுதான் எண்ணினார். ஒரு பிச்சைக்கார சிறுவனும், அவனுடன் வந்த குரங்கும் செய்த விஷமங்களினால் ஒரு கப்பலை கவிழ்த்துவிட்டதாகக் கேள்விப்பட்ட கதை அவருக்கு நினைவுக்கு வந்து விட்டது. உடனே மாதுவும் அவனுடைய ஆபீர நரிகளும் சேர்ந்து 'கோஷனை' வெகு சுலபமாகக் கவிழ்த்து விடும் என்றே முடிவு கட்டி விட்டார்.

மாதுவோ, ஜமீன்தார் தன்னைப்பற்றி என்ன நினைக்கிறார் என்று சற்றும் கவலை கொள்ளவில்லை. அவனுக்கு ஜமீன்தாரை நன்றாகத் தெரியும். ஜமீன்தாருடன் தான் இருப்பது, ஜமீன்தாருக்கு ரொம்பவும் கவலையளிக்கும் என்பதும் நன்றாகத் தெரியும்.

மாது நல்ல நரிக்காட்டை விட்ட பிறகு, வெகு நாட்கள் தஞ்சாவூரில் தாமதிக்க வேண்டியதாகி விட்டது. அவனை வேலைக்கு அமர்த்திக் கொண்ட கங்காணி என்ன காரணத்தினாலோ, இலங்கைக்கு அவனை அனுப்பத் தாமதித்து வந்தார். ஒவ்வொரு நாளும் மற்றக் கூலிகளை இலங்கைக்கு அனுப்பப்படுவதை பார்க்கும்போதெல்லாம், தான் மட்டும் போக முடியவில்லையே என்று ஏக்கமாக இருக்கும் அவனுக்கு. இந்த ஏக்கம் நாளுக்கு நாள்

அதிகரித்து. படுத்த படுக்கையாகி விட்டான். ஆகவே, வைத்தியம் செய்ய ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டான். அவனுக்கு வந்த ஜுரம் வெகு நாள் நீடிக்கவில்லை. சீக்கிரமே குணமடைந்து விட்டான். அவன் குணமடைந்ததும், அவனை இலங்கைக்கு அனுப்பி வைக்குமாறு, கங்காணிக்கு இலங்கையிலிருந்து கடிதம் வந்திருப்பதாகக் கேள்விப் பட்டான். அக் கடிதத்தில், மாதுவின் தற்போதைய தேக நிலைமை முன்னிட்டு, அவனுக்குப் பிரயாணத்தில் தகுந்த வசதி செய்து தருமாறு எழுதப் பட்டிருந்தது.

அதனால்தான் மாது தனுஷ்கோடிக்கு இரண்டாம் வகுப்பிலும் 'கோஷன்' கப்பலில் ஜமீன்தாருக்குச் சமமாகவும் பிரயாணம் செய்ய நேர்ந்தது.

## 17. மாதவன் கங்காணி

மாது இலங்கைக்குச் சென்று என்னவெல்லாம் செய்தான் என்பதைப் பற்றி நேயர்களுக்குத் தெரிவிக்க இயலாமலிருக்கிறோம். அது சம்பந்தமாக நமக்குப் போதிய விவரங்கள் கிடைக்கவில்லை. அந்தத் தகவல்கள் எல்லாம் கிடைத்தால், எவ்வளவோ சுவாரஸ்யமாக இருக்கும். துணிகரமான சம்பவங்களும் அதிசயம் விளைவிக்கும் நிகழ்ச்சிகளும் நிறைந்த வாழ்க்கையாக இருக்கும்.

எனினும் 'கோஷனை' விட்டும், ஜமீன்தாரை விட்டும் பிரிந்த மாது, காளடைவில் 'சிறுவன்' என்கிற நிலை மாறி, வாட்ட சாட்டமான வாலிபனானான். இதை ஒரு சாதாரண விஷயமாகக் கருதலாம். அப்படியல்ல. சாதாரண சிறுவனாக இருந்த மாது இப்பொழுது நல்லநரிக்காட்டு ஜமீன்தார் ஆகி விட்டான்!

இந்த மாறுதல், இலங்கையில் மாது சோர்வின்றி உழைத்ததாலும், நல்லநரிக்காட்டு இரண்டாவது ஜமீன்தாரின் மடமையினாலும் நேர்ந்தது என்று சொல்ல வேண்டும்.

மாது ஒரு சில ஆண்டுகள் கூலியாக வேலை செய்த பிறகு, கங்காணியாகி விட்டான். இப்போது எத்தனையோ ஐரோப்பிய தோட்ட முதலாளிகள் கங்காணி மாதவனின் வேலையைக் கண்டு மகிழ்ச்சியடைந்தனர். அம் மகிழ்ச்சியில் ஏராளமாக இனாம் வழங்கினார்கள். இம்மாதிரி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் மாதுவுக்குச் செல்வம் சேர்ந்து கொண்டிருந்தது. அதற்கு நேர் மாறாக ஜமீன்தாரின் செல்வம் தேய்ந்து கொண்டே வந்தது.

சோம்பலும், உதவாக்கரை நண்பர்களின் சகவாசமும் அவருடைய அழிவுக்குக் காரணங்களாயின. வருஷம் தவறாமல் இலங்கை செல்லும் வழக்கமும் தடைப்பட்டது. அதனால், இலங்கையிலிருந்து வந்து கொண்டிருந்த வருமானம் வருஷம் தவறாமல் குறைந்து கொண்டே வந்தது. ஆனால் அவருடைய செலவோ அதிகரித்து வந்தது. இதன் பலனாக தஞ்சை ஜில்லாவிலிருந்த அவருடைய நிலபுலன்களின் மீதும் இலங்கையிலிருந்த சொத்துக்களின் மீதும் அளவுக்கு மீறிக் கடன் வாங்கி, தீராக் கடனாளியானார்.

'இனி கடன் கொடுப்பார் யாருமில்லை; விற்றுத் தொலைக்க வேண்டியதைத் தவிர வேறு வழி கிடையாது' என்ற நிலை ஏற்பட்டபோது தம்முடைய ஜமீனையும் அரண்மனையையும் விலைக்கு வாங்குபவர்கள் யாராகிலும் உண்டா என்று தேடத் தலைப்பட்டார். அப்போது மாதுவின் செல்வாக்கும் செல்வ நிலையையும் பற்றிக் கேள்விப்பட்ட ஜமீன்தார், முன்பு

நாகபுரி பிரதம நீதி மன்றத்தைச் சேர்ந்த ஸ்ரீ பி. எஸ். ராமகிருஷ்ணன் அவர்களின் ஏகபுதல்வி சௌ. இந்துபாலாவுக்கும், சித்தூர் இம்பீரியல் பாங்கி ஏஜெண்டான ஸ்ரீ கே. வி. கிருஷ்ணையர் அவர்களின் சகோதரர் சிரஞ்சீவி கே. வி. கணபதி பி. எஸ்ஸி., அவர்களுக்கும் சென்னை மினர்வா காலேஜ் கட்டிடத்தில் ஏப்ரல் மாதம் 30-ந் தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. திருமணத்திற்குப் பல பிரமுகர்களும், நண்பர்களும் விஜயம் செய்து தம்பதிகளை ஆசீர்வதித்தனர். மணமக்களுக்கு ஏராளமான பரிசுகளும், வாழ்த்துச் செய்திகளும் வந்து குவிந்தன.

★



அவனுடன் பேசி ஏற்படுத்திக் கொண்ட சினேக பலத்தைக் கொண்டு பேச்சு வார்த்தை நடத்த ஆரம்பித்தார். மாது அவர் கேட்ட விலை கொடுத்து வாங்கத் தயாராய் இருந்தான். அதுமட்டுமல்ல; ஜமீன்தார் தாம் உயிருடன் இருக்கும் வரை அரண்மனையில்தான் குடியிருக்க விரும்புவதாகச் சொன்னார். அதற்கும் சம்மதித்தான் மாது. ஆனால் பாவம், ஜமீன்தார் அதிக நாட்கள் உயிருடன் இருக்கவில்லை!

அவர் இறந்துவிட்டார் என்ற செய்தியைக்கேட்டவுடன், மாது நல்ல நரிக்காட்டுக்கு ஜமீன்தாராக வந்து சேர்ந்தான்.

அவன் நல்ல நரிக்காட்டுக்குத் தனியாக வரவில்லை. அவனுடன் அவன் மனைவியும் வந்திருந்தாள். அவன் தன் மனைவியை அன்புடன் 'மாதவி' என்று அழைப்பான். ஆனால் அவளுடைய உண்மைப் பெயர் மிஸ். இங்கிள்ஸ் என்பது. இலங்கையில் பெரிய பணக்காரர் என்று கருதப்பட்ட ஒரு தோட்ட முதலாளியின் ஒரே மகள். அவளுக்கு எப்படியோ மாதுவின்மீது காதல் உண்டாகி, மற்ற தோட்ட முதலாளிகளின் கண்டனங்களைச் சற்றும் பொருட்படுத்தாமல் மாதுவையே கல்யாணம் செய்து கொண்டாள்.

அவர்களுடன் அவர்களுடைய விஷமக்காரப் பையன் கிட்டுவும் வந்தான்.

இப்பொழுது நாம் பார்க்கும் மாது, அழுக்குடை தரித்த அவலட்சணமான மாதுவல்ல. நவநாகரிக உடை உடுத்திய, நல்ல நரிக்காட்டிலே பார்க்கக் கிடைக்காத அழகு வாய்ந்த வாலிப மாதுவைப் பார்க்கிறோம். அவன் தன்னுடைய அழகிய பெயராகிய மாதவன் என்பது மாது என்று சுருங்குவதை வெறுத்ததுபோல் வேறு எதையும் வெறுத்ததில்லை. ஆகவே, இனி நாமும் அவனை முழுப்பெயர் வைத்துத்தான் அழைக்கவேண்டும்.

* * *

திரு மாதவன் கங்காணி தம் சொந்த ஊருக்கு ஜமீன்தாராக நுழையும் சம்பவத்தை ஒரு விழாவாகக் கொண்டாட விரும்பினார். தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த பொறுக்கி எடுத்த பிரமுகர்களை அழைப்பு அனுப்பி வரவேற்று விருந்தளிக்க ஏற்பாடு செய்தார். நல்ல நரிக்காடு பஸ் பாதைக்கும் ரயில் பாதைக்கும் சம்பந்தமின்றி வெகு தூரத்தில் இருப்பினும் அழைப்பு அனுப்பப்பட்ட அத்தனை பிரமுகர்களும் வந்திருந்தனர். விருந்துக்கு வந்திருந்த அத்தனைப் பிரமுகர்களைப் பற்றியும் கூறவேண்டிய அவசியமில்லைதான். ஆயினும் ஒரே ஒரு பிரமுகரைப் பற்றி மட்டும் சொல்லித்தான் ஆகவேண்டும்.

அவர்தான் திருவாளர் தாமோதரன்.

அவருக்கு இப்போது வயது ரொம்ப ஆகி மூப்படைந்து விட்டார். உடல் தளர்ந்து விட்டது. கால் தள்ளாடத் தொடங்கி விட்டது. இருந்தும் அந்த நீண்ட சாலையில் தட்டுத் தடுமாறி வந்து கொண்டிருந்தார். அவர் வருகையைப் பார்த்தவர்கள், 'பாவம் எதற்காக இவ்வளவு சிரமப்பட்டுக் கொண்டு வருகிறார்' என்றுதான் எண்ணினார்கள். ஆனால் அந்த உத்தம மனிதரோ ஏதோ புண்ணிய க்ஷேத்திரத்துக்கு யாத்திரை போனால் எவ்வளவு பக்தி சிரத்தையுடன் போவார்களோ, அம்மாதிரி நினைத்துக் கொண்டு மாதவன் வீட்டுக்குத் தள்ளாடி வந்து கொண்டிருந்தார். (தொடரும்)

---



○●○

## ஓ கோ?

"கமலா! சரோஜா அகத்துக்காருக்கு ஒரு கை ஏன் குட்டையாயிருக்கிறது?"

"அது தெரியாதா உனக்கு? அவர் 'ஷார்ட் ஹாண்ட்' பாஸ் பண்ணியிருக்கிறார்!"

○●○

# இமயத்திலுள்ள பூக்களின் குளுமையான பரிமளத்தைப் போல் மலர்ச்சியைத் தருவது




குளுமையும் மலர்ச்சியும் தரும் ஹிமாலயா புக்கே டாய்லட் பௌடர் இமயத்திலுள்ள பூக்களைப்போல் பரிமளம் கொண்டது. அது உங்கள் சருமத்தை பட்டுப்போல் மிருதுவாக்குகிறது. அதன் மகிழ்ச்சி தரும் நீடித்து நிற்கும் பரிமளம் உங்களை நாள்முழுவதும் கவர்ச்சியாகவும் மலர்ச்சியுடனும் இருக்கச் செய்கிறது.

## ஹிமாலயா புக்கே
## டாய்லட் பௌடர்

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

KBT. 6-172-55 TM

# கம்பர் தரும் காட்சி

[டி. கே. சி.]

## 298. எமனையும் ஆட்டுவிப்பேனே நான்!

**வி**பீஷணன் கும்பகர்ணனிடம் மிக்க ஆத்திரம் கொண்டவனாய் அவனை ராமனிடம் வரும்படியாக அழைத்தான் என்பதைப் பார்த்தோம்.

கும்பகர்ணனும் தம்பி விபீஷணனிடம் மிக்க பரிவு கொண்டவனாய் "நீ உயர்ந்த லக்ஷ்யத்துக்கு உரியவன், உன் புகழ் உலகம் உள்ள அளவும் நிற்கும். ஆனால் என்போன்ற சாமான்ய மக்களுக்கு லக்ஷ்யம் எல்லாம், போரில் சென்று மிருகத் தன்மையான மரணம் எய்துதல் தான்" என்று சொன்னதையும் பார்த்தோம்.

அதற்கு மேலும் சொன்னான்:

"அரசனைத் திருத்த முயல வேண்டும். அது முடியாது போனால் அவனுக்காக உயிரைத் தத்தம் பண்ணுவது தான் செய்யவேண்டிய காரியம்" என்று சொன்னதையும் பார்த்தோம்.

இந்த வார்த்தையைச் சொன்னதும் கும்பகர்ணனது மனசு தம்பியைவிட்டு நீங்கித் தமயனிடம் சென்று விட்டது. தமயன் என்ன சாமானியப்பட்டவனா!

* * *

**ரா**வணன் உண்மையிலேயே உயர்ந்த பக்தன், நல்ல அறிவாளி. கலைகளில் தோய்ந்து பண்பட்ட உள்ளம் படைத்தவன்.

மக்களிடத்தில் அதாவது பிரஜைகளிடத்தில் மிக்க அனுதாபம் கொண்டவன்.

இலங்கை எரிபட்டு மக்கள் மடிந்தார்கள் என்ற விஷயம் அவனை நெடுநாள் வரைக்கும் தீராக் கவலைக்கு உள்ளாக்கி விட்டது.

பிரஜைகளிடத்திலேயே அவ்வளவு பாசம். குடும்பத்தில் உள்ளவர்களிடத்தில் உள்ள பாசமோ ஒப்பற்றது. பிள்ளைகளிடத்தில் ஒரே வாஞ்சை. அப்படியே தம்பிமார்களிடத்திலும்; அதாவது விபீஷணன் கும்பகர்ணன் இருவர் இடத்திலும் அளவில்லாத வாஞ்சை.

அது காரணமாகவே விபீஷணன் ராவணனுக்காக அவ்வளவு பரிந்து வாதாடினான். அப்படியே கும்பகர்ணனும் வாதாடினான்.

அண்ணனிடத்திலுள்ள பாசம் அவ்வளவு ஆழமாய் இருக்கிறது இரண்டு தம்பிகளுக்கும்.

* * *

**கு**ம்பகர்ணனுடைய மனசு விபீஷணனை விட்டு விட்டு இப்போது ராவணனை நோக்கிச் செல்லுகிறது. ராவணன் மேல் உள்ள பாசம் கும்பகர்ணனை எதிர்பாராத ஒரு வேகத்தோடு தாக்குகிறது.

"ஒப்பற்ற வீரனாயிற்றே அண்ணன். பகைவர் என்று யாருமே கிடையாதே. கயிலையங்கிரியைக் கூட செந்தூக்காய்த் தூக்க வல்லவன் என்று சொல்ல வேண்டுமே. அடடா!"

இணையின்றி உயர்ந்தவீரன்
  எதிலார் யாரும் இல்லான்,
பிணையொன்று கண்ணாள்பங்கன்
  பெருங்கிரி தெரியப்பேர்த்த
பணையொன்று திரள்தோள்கால
  பாசத்தால் பிணிப்பக்கூசித்
துணையின்றிச் சேறல்நன்றோ
  தோற்றுள கூற்றின்சூழல்.

[இணையின்றி உயர்ந்த வீரன் எதிலார் யாரும் இல்லான்: ஒப்பற்ற வீரன்; எதிரியே இல்லாத வீரன் (எதிலார்: எதிரிகள்) பிணை ஒன்று கண்ணாள் பங்கன்: மான் போன்ற கண்ணாள் பார்வதியை இடது பக்கத்தில் கொண்ட சிவபெருமானது: பெருங்கிரி தெரியப் பேர்த்த: கயிலையங்கிரியானது தெரிந்து போகும்படியாகத் தூக்கிய; பணை ஒன்று திரள் தோள்: பெருமை வாய்ந்த திரண்ட தோள்கள்; கால பாசத்தால் பிணிப்பக் கூசி: எம தூதர்களது பாசக் கயிற்றினால் கட்டுண்டு பயத்துக்குள்ளாகி: துணையின்றிச் சேறல் நன்றோ: துணை யாரும் இல்லாதபடி நடந்து செல்லுதல் நன்றாக இருக்குமா? அவன் தகுதிக்குப் பொருந்துமா?

அதுவும் எங்கே?—தோற்றுள கூற்றின் சூழல்: தோற்றுப்போன எமனது உலகத்தில்.]

**அ**ண்ணன் ராவணனை எண்ணிய மாத்திரத்தில் கும்பகர்ணனது உள்ளத்தில் ஒரு சோக வெறியே உண்டாய் விட்டது. அந்த வெறியில்த்

தன் அண்ணன் கால பாசத்தால் கட்டுப் பட்டு பயத்தால் நடு நடுங்கி எமலோகத்தில் துணையில்லாமல் நடந்து போகிறதாக ஒரு காட்சி கண்ணுக்குத் தோன்றுகிறது.

உள்ளத்துக்கு உண்மையான காட்சிதான்.

இந்தக் காட்சி தோன்றிய மாத்திரத்தில் வீராவேசம் பொங்கி வருகிறது. தன்னுடைய மானமே பெரிதென்ற எண்ணம் தனித்த வேகத்தோடு மேலிடுகிறது.

"இந்த இலங்கை சாம்ராஜ்யத்தை விரும்பி, என் தமயனது உயிரை வாங்கிய எதிரியை வாழ்த்துகிற காரியம் எனக்கு முடிகிற காரியமா?"

செம்பிட்டுச் செய்தஇஞ் சித்
திருநகர்ச் செல்வம்தே ரீ,
வம்பிட்ட தெரியல்எம் முன்
உயிர்கொண்ட பகையைவாழ்த் தி
அம்பிட்டுத் துன்னம் கொண் ட
புண்உடை நெஞ்சோ(டு),ஐ ய
கும்பிட்டு வாழ்கிலேன் யான்,
கூற்றையும் ஆடல்கண் டேன்.

[செம்பிட்டுச் செய்த இஞ்சி: கன்னும் புக்கும் பதிலாகச் செம்பை உருக்கிவிட்டுக் கல்லுகளை இணைந்த கோட்டை கொண்ட; திருநகர்ச் செல்வம் தேரீ: இந்த அழகிய இலங்கை நகரமாகிய செல்வத்தை விரும்பி, அதற்காக; வம்பிட்ட தெரியல்: வாசனை கொண்ட மாலை சூடிய; எம்முன்: என் தமயன் ராவணனது; உயிர் கொண்ட பகையை வாழ்த்தி: உயிரை வாங்கிய எதிரியை வாழ்த்திக் கொண்டே; அம்பிட்டுத் துன்னம் கொண்ட புண்உடை நெஞ்சோடு: அம்பினால் குத்திப் புண்பட்டது போன்ற மனசோடு: ஐய: தம்பி விபீஷணனே; கும்பிட்டு வாழ்கிலேன் யான்: எதிரியைக் கும்பிட்டு உயிர் வாழ்தல் என்பது முடியாத காரியம்; கூற்றையும் ஆடல் கண்டேன்: எமனையும் குரங்காட்டம் ஆட்டக் கூடிய எனக்கு—முடியாத காரியம்.]

கும்பகர்ணனுக்குத் தம்பி விபீஷணனிடம் எவ்வளவு பாசமும் மதிப்பும் இருந்ததோ அவ்வளவு அண்ணனிடமும் இருக்கிறது.

அண்ணன் மேல் வந்த பரிவு அபூர்வமான உணர்ச்சியைக் கிளறிவிட்டது.

அழகான பாவம் கொண்ட கவி.

<u>நமது இலங்கைக் கடிதம்</u>

# மந்திரி மீது மந்திரி கண்டனம்!

ரஜனி

கொழும்பு, ஜூன் 14—

இலங்கையில் டாக்டர் பி. ஆர். அம்பேத்கார் செய்த பிரசங்கங்கள் இங்குள்ள இந்துக்களுக்கு மிகுந்த வருத்தத்தையும் மனக்கொதிப்பையும் உண்டுபண்ணியிருக்கின்றன. உதவி கல்வி மந்திரியும், இலங்கை அரசாங்கம் நியமித்த இந்து ஆலய விசாரணைக் கமிட்டித் தலைவரும், பல மத ஸ்தாபனங்களில் முக்கியமான அங்கம் வகிப்பவருமான ஸ்ரீ கே. கனகரத்தினம் டாக்டர் அம்பேத்காரின் விபரீதப் போக்கைக் கண்டித்து, "இந்து மதத்தை இவ்வளவு தூரம் வெறுக்கும் ஒருவரிடம் இந்து சட்டத் தொகுப்பு மசோதாவைத் தயாரிக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருப்பது விவேகமானதா?" என்று கேட்டிருக்கிறார். அரசியல் காரணங்களுக்காக இல்லாமிய மதத்தைத் தழுவுமாறு ஒரு சமயம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு டாக்டர் அம்பேத்கார் யோசனை சொல்லியதைச் சுட்டிக் காட்டி, இப்படிப் பட்டவருக்குத் திடீரென பௌத்த மதத்தில் பிரேமை பிறந்ததைக் கண்டு இலங்கை பௌத்தர்கள் ஏமாந்துவிடக் கூடாதென்றும் ஸ்ரீ கனகரத்தினம் எச்சரித்திருக்கிறார்.

இலங்கையிலுள்ள தாழ்த்தப்பட்ட மக்களின் உற்ற நண்பரென்று கருதப்படும் யாழ்ப்பாண நகர மேயர் ஸ்ரீ வி. பொன்னம்பலம் அளித்த ஒரு பேட்டியில், ஹரிஜனங்களின் கஷ்டங்களைச் சட்டரீதியாக ஒழித்த இந்திய சர்க்காரின் ஒரு மந்திரி அதே போல இலங்கை அரசாங்கமும் செய்ய வேண்டுமென்று வற்புறுத்துவதை விட்டு, தாழ்த்தப்பட்ட மக்களெல்லாம் பௌத்த மதத்தில் சேரவேண்டும் என்று சொல்லியிருப்பது விஷமத்தனமான யோசனை என்று கண்டித்திருக்கிறார்.

தாழ்த்தப்பட்ட மக்கள் இந்து மதத்திலேயே இருந்து ஒற்றுமையுடன் உரிமைப் போரை நடத்தவேண்டுமே தவிர மதம் மாறுவது பைத்தியக்காரத்தனம் என்றும் ஸ்ரீ பொன்னம்பலம் அறிவுறுத்தியிருக்கிறார்.

## பிரதமரிடம் தூது

குடியேற்ற வெளியேற்றக் கட்டுப்பாடு சட்டம் வருவதற்கு உண்மையில் யார் மூல காரணமாயிருந்தாரோ, அவரையே தலைவராகக்கொண்டு இலங்கை இந்திய மருத்துவர் சங்கம் பிரதம மந்திரியிடம் தூது போக புத்திசாலித்தனமாக ஒரு தீர்மானம் செய்திருக்கிறது. இவ்வாரம் மந்திரி ஸ்ரீ ஏ. இ. குணசிங்கா தலைமையில் இந்திய மருத்துவர்கள் ஒரு பொதுக் கூட்டம் நடத்தி இமிகிரேஷன் சட்டம் வெகு கடுமையாக அமுல் நடத்தப்படுவதையும் வாச பர்மிட்டுப் பெறுவது அசாத்தியமாயிருப்பதையும் எடுத்துக் காட்டினார்கள். இந்தியாவுக்குப் போகும் மருத்துவர்கள் மறுபடி இலங்கை திரும்ப முடியாதவாறு தடுக்கப்படுவதினால் சலூன்களை நடத்த முடியாமல் தாங்கள் கஷ்டப்படுவதைச் சொல்லி, சட்ட கெடுபிடிகளைத் தளர்த்தும்படி ஸ்ரீ குணசிங்கா தலைமையில் பிரதம மந்திரியிடம் தூதுபோய் விண்ணப்பம் செய்வதென்று தீர்மானித்தார்கள். மருத்துவர்களுக்குச் சுலபமாக வாச பர்மிட்டுகள் கிடைக்கத் தம்மால் இயன்றதைச் செய்யவும் பிரதமரிடம் தூதுபோகவும் மந்திரி ஸ்ரீ குணசிங்கா ஒப்புக் கொண்டிருக்கிறார்.

## நடுத்தெருவிலே!

கடன் கொடுத்து லேவாதேவித் தொழில் நடத்துவதைச் சட்ட பூர்வமாகத் தடைசெய்ய வேண்டுமென்று இலங்கை மார்க்கெட்டிங் இலாகா அதிகாரிகள் சங்கம் தீர்மானித்ததைப் பின்பற்றி கொழும்பு கோட்டைப் பகுதியில் கொடுத்த கடனை வசூலிப்பதற்காகக் காத்திருக்கும் லேவாதேவிக்காரர்களைப் போலீசார் கைது செய்துகொண்டு போக ஆரம்பித்திருக்கிறார்கள். கடன்பட்ட அரசாங்க குமாஸ்தாக்களுக்கும் வர்த்தக ஸ்தாபனச் சிப்பந்திகளுக்கும் லேவாதேவிக் காரர்கள் கொடுத்த கடனை நடுத்தெருவிலே திருப்பிக் கேட்பது பெரிய அவமானமாயிருக்கிறதாம். இதற்காக அநேகர் வேலைக்கு வாராமலே இருந்து விடுகிறார்களாம். அவர்கள் புகார் செய்ததின் காரணமாகவே கடன்பட்ட ஏழைச் சிப்பந்திகளை அவமதிப்பிலிருந்து காப்பாற்றுவதற்காகப் போலீசார் லேவாதேவிக்காரர்கள் மீது நடவடிக்கை எடுப்பதாகக் கூறப்படுகிறது. கடன்பட்டவர்களுக்கு ஒருதலைப் பட்சமாகப் போலீசார் இவ்விதம் உதவிபுரிந்தால் வாங்கிய கடனை யாரும் திருப்பிக் கொடுக்க மாட்டார்களென்றும், கொடுத்த கடனைக் கேட்கும்பொழுது லஜ்ஜைப் படுகிறவர்கள் கடன் வாங்கும்பொழுது லஜ்ஜைப்படவில்லையே என்றும் லேவாதேவிக்காரர்கள் சொல்லுகிறார்கள்.

## தமிழ்ச்சங்க ஆண்டு விழா

கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழா இம்மாதம் 17-ந் தேதி நடப்பதாயிருந்தது. அதற்குப் பத்திரிகைகளும் அச்சிட்டு விநியோகித்த பின் விழாவை ஆகஸ்டு மாதத்துக்கு ஒத்திப்போட்டு விட்டார்கள். காரணம் இந்தியாவிலிருந்து அழைக்கப்பட்டிருந்த "கல்கி" ஆசிரியர் குறித்த காலத்தில் வர முடியாமற் போனதுதான். "இப்பொழுது அவர் வரமுடியாவிட்டால் அவர் வருகிறவரையில் விழாவை ஒத்திப் போடுவோமே தவிர அவர் வராமல் விழாவை நடத்தப் போவதில்லை" என்று சங்கத்தலைவர் ஸ்ரீ அருள்நந்தி உறுதியாகச் சொல்லி விட்டார்.

# வெற்றியின் கை

**அம்புஜம்**

"அப்பாவிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்தீர்களா?" என்றாள் ராதா. அவள் குரலில் மகிழ்ச்சி தொனித்தது.

அவள் தங்கைக்கு விவாகம் நிச்சயமாகியிருந்தது. அதுதான் சமாசாரம். அதற்கு அவளே முன் நின்று முயற்சி செய்தாள். அது வெற்றிகரமாக முடிந்ததில் அவளுக்கு அளவற்ற ஆனந்தம்.

ஆனால் நரசிம்மனுக்கு அவள் மகிழ்ச்சி ஆத்திரத்தை உண்டு பண்ணியது. 'தங்கை கல்யாணத்திற்கு முயற்சி பண்ணுகிறேன்' என்ற காரணத்தைச் சொல்லிக் கொண்டு பிறந்தகத்தில் போய் இரண்டு மாதம் இருந்தாள் அவள். அவள் பிரிவைத் தாங்காமல் அந்த இரண்டு மாதமும் மிகவும் கஷ்டப்பட்டான் நரசிம்மன். வாரம் தவறாமல் அவளுக்குக் கடிதம் போடுவான். அவளும் பதில் போடுவாள். ஆனால் அவற்றில் இருக்கும் விஷயங்கள் பிச்வாத்ருமையால் வருந்தும் அவன் உள்ளத்திற்கு இன்பம் அளிப்பனவாக இரா. தந்தையின் ஹாஸ்யப் பேச்சு, தாயின் சமையல் திறமை, தங்கையின் கல்விப் பெருமை, கடைசித் தம்பியின் மழலைச் சொற்கள் இவற்றைப் பற்றியே ஓயாமல் புகழ்ந்து எழுதியிருப்பாள். இத்தனைக்கும் இடையில் அவன் உடல் நலத்தை விசாரிப்பாள். ஜாக்கிரதையாக உடம்பைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி எச்சரிப்பாள்.

தன் தங்கையின் விருப்பத்திற்கிணங்க அவள் கல்யாணத்திற்காகத் தான் செய்யும் முயற்சிகளைக் கதையாக எழுதுவாள். தங்கையின் விருப்பத்துக்கு இசையும்படி அப்பாவைத் தயார் பண்ணுவதைப் பற்றிப் பக்கம் பக்கமாக எழுதுவாள். அவள் கல்யாணம் நிச்சயமாகிவிட்டால் போதுமென்று ஆகிவிட்டது நரசிம்மனுக்கு. அப்போது தானே அவன் மனைவியும் இங்கே திரும்பி வருவதைப் பற்றி யோசிப்பாள்?

ஆனால் விவாகம் நிச்சயமாவதற்கு முன்பே அவள் திரும்பிவிட்டாள். நரசிம்மனின் மெலிந்த உடம்பைப் பார்த்துத் திடுக்கிட்டு விட்டாள். அவன் கைகளைப் பற்றி, "இனிமேல் நான் உங்களை விட்டு எங்குமே போக மாட்டேன்" என்று விம்மினாள்.

பிறகு அவனுக்குச் சமாசாரம் தெரிந்தது. அவளுக்கும் அவள் தங்கைக்கும் ஏதோ மனஸ்தாபம் உண்டாகிவிட்டது. அதைப் பற்றி விவரமாகச் சொல்லாவிட்டாலும் அதன் காரணத்தை அவளே ஒருவாறு சொல்லி விட்டாள்.

"நான் அவளுக்காக அப்பாவிடம் எப்படியெல்லாம் மன்றாடினேன். அவர் தம் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்வதற்காக என்னவெல்லாம் வாதாடினேன்! அவள் விரும்பும் அந்த வாலிபனை எப்படி எல்லாம் புகழ்ந்தேன்! அதெல்லாம் அவளுக்கு நன்றாக இருந்தது. ஆனால் ஒரு வார்த்தை—ஒரே ஒரு வார்த்தை—அவளுடைய தந்தையைப் பற்றிச் சற்றுப் பரிகாசமாகச் சொன்னதற்கு அவளுக்கு எவ்வளவு கோபம் வந்து விட்டது! இரண்டு நாள் பேசவேயில்லை. அதற்குப் பிறகு பேசினாலும் முகம் கொடுத்துப் பேசவில்லை. அப்பாவிடம் அவளுக்காகப் பரிந்து பேச நான் வேண்டியிருந்தேன். அப்பா மனம் மாறிய பிறகு, அவளுக்கு வரப்போகும் மாமனாரைப் பற்றி நான் ஒரு வார்த்தை சொன்னதற்கு இவ்வளவு கோபம்!" என்று பொரிந்து கொட்டி விட்டாள் ராதா.

"கல்யாணம் எப்போது?" என்று கேட்டான் நரசிம்மன்.

"சித்திரையில். ஆனால் அவள் கல்யாணத்திற்கு யார் போகப் போகிறார்கள்? ஏதோ நம் கடமை; தங்கை என்ற பாசத்திற்காக முயற்சி பண்ணியாகிவிட்டது. அதுவும் வெற்றிகரமாக முடிந்துவிட்டது. அதற்கு மேல் நமக்கு என்ன வேண்டும்?" என்றாள் ராதா வைராக்கியத்துடன்.

"சித்திரைக்கு இன்னும் இரண்டு மாதங்கள் இருக்கின்றனவே. அதற்குள் உன் மனம் மாறாமலா போகிறது?" என்றான் நரசிம்மன்.

* * *

பத்துப் பதினைந்து நாட்கள் சென்றன. "பத்மா அப்படிச் சொல்வாள், இப்படிச் செய்வாள்" என்று ஆரம்பித்து விட்டாள் ராதா. அதைக் கேட்ட நரசிம்மன் உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான்.

அதன் பிறகுதான் அவள் தந்தையின் கடிதம் வந்தது. சித்திரை பிறந்ததும் முதல் முகூர்த்தத்திலேயே கல்யாணத்தை நடத்திவிடப் போவதாகவும், வருஷப் பிறப்பிற்குப் பத்து நாட்கள் முன்னதாகவே வந்துவிடும்படியும் அவர் எழுதியிருந்தார். ராதா உற்சாகத்துடன் பிரயாணத்துக்கு ஏற்பாடு பண்ண ஆரம்பித்து விட்டாள். ஏதோ பெரிய காரியம் சாதித்து விடப் போவதாகக் கற்பனை பண்ணிக் கொண்டு தானாகவே பொறுப்புகளைத் தலைமேல் போட்டுக் கொள்பவளுக்கு ஒருவர் உதவி கோரி எழுதினால் கேட்க வேண்டுமா? நரசிம்மன் தான் கல்யாணத்திற்கு முதல் நாள் வந்து சேருவதாகச் சொல்லி விட்டான்.

ஆனால் அவன் கல்யாணத்திற்குப் போக முடியவில்லை. கல்யாணம் முடிந்து ஒரு மாதத்திற்குப் பின் திரும்பி வந்தாள் ராதா. அவள் முகம் வாடியிருந்தது. எதிலேயும் அவள் உற்சாகம் காட்டவில்லை.

"பத்மாவுக்குத் துளி கூடப் பாசமே கிடையாது. அவளுக்குத் தன் கணவன் தான் உசத்தியாகி விட்டான். அப்படித் தான் இருக்க வேண்டும். ஆனால் அதற்காக மற்றவரை அலட்சியம் பண்ண வேண்டுமா, என்ன?

"அம்மாவின் மனம் கூட மாறிவிட்டது. என்னவானாலும் அவன் பணக்கார மாப்பிள்ளைதானே! அவனிடமும் அவன் மனைவியான தன் மகளிடமும் அலாதி அன்பும் மதிப்பும்தான். கல்யாணமான மூன்றும் நாளே பத்மா கணவனுடன் ஊருக்குக் கிளம்பி விட்டாள். மாப்பிள்ளை வற்புறுத்தா விட்டாலும் அப்படிச் செய்வதாகப் பொய் சொன்னது எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்தது. கல்யாணமான வீட்டைச் சீர்படுத்த அம்மா திண்டாடுவாளே என்று அவள் யோசிக்கவில்லை. அதற்குத்தான் நான் இருக்கிறேனே! வீடு ஒரு மாதிரி சீர்திருந்தியபிறகு, உங்களுக்கு உடம்பு சரியில்லையென்ற கடிதத்தைப் பார்த்து நான் புறப்பட்டதும் அம்மாவுக்குப் பிரமாத கோபம் வந்து விட்டது. 'எல்லோருக்கும் அவரவர் காரியம்தான் பெரிதாக இருக்கிறது' என்று கோபித்துக் கொண்டாள். அதன் பிறகு அவள் என்னிடம் கலகலப்பாக இருக்கவில்லை" என்று கூறியபோது ராதாவின் கண்களில் கண்ணீர் நிரம்பியது.



"பொறுப்புகளை ஏற்க வேண்டும் என்கிற ஆசை உனக்கு இருக்கிறதே தவிர அதற்கு வேண்டிய பொறுமை இல்லை. எதற்கும் வீண் சந்தேகம். உன் அம்மாவுக்கு உன்னைக் கோபித்துக் கொள்ள உரிமை கிடையாதா? அதை ஏன் தவறாக நினைக்க வேண்டும்?" என்றான் நரசிம்மன்.

ஆம், அவளுக்கு எதிலுமே பொறுமை கிடையாது. சீக்கிரம் சந்தேகம் வந்து விடும்; ரோஷக்காரி.

* * *

நரசிம்மனுக்கு இந்தப் பழைய சம்பவங்கள், நிகழ்ச்சிகள் ஒன்றின்பின் ஒன்றாக நினைவுக்கு வந்து முற்றுப் பெற்றன. உடனே, இவற்றையெல்லாம் நினைவுக்குக் கொண்டு வந்த தன் கையிலிருந்த ரோஷக்காரி ராதாவின் போட்டோவை மற்றுமொருமுறை திருப்பிப் பார்த்தான். ஒடிசலான உடம்புடன் ஒட்டினாற்போல் உடுத்திய சேலையுடன், நீண்ட உருண்ட கைகளால் தூணை அணைத்தபடி நின்றிருந்தாள் ராதா. 'போட்டோ ஆல்பத்தை' மூடிவிட்டு அந்த டிராயரிலிருந்து அவள் பொருள்களை ஒவ்வொன்றாக எடுக்க ஆரம்பித்தான். அதில் ஒரு 'நோட்புக்' இருந்தது. முத்து முத்தாக ராதா அதில் எழுதியிருந்தாள். அந்த அழகான எழுத்துக்களைப் பார்த்ததும், மறுபடியும் அவன் கண்களில் கண்ணீர் மல்கியது. அந்தக் கண்ணீரைத் துடைத்து விட்டுப் படிக்க ஆரம்பித்தான்:—

நான் அசடேதான்; முழு முட்டாள் தான். பெற்றோருக்காகப் பரிந்து கொண்டு கணவரையும் கணவருக்காகப் பரிந்து

கொண்டு பெற்றோரையும் விரோதித்துக் கொண்டேன். இரு சாராருக்கும் நான் தங்களிடம் கொண்ட அன்பின் பெருமை தெரியவில்லை. அது என் துரதிர்ஷ்டம். பெற்றோருக்கு என்னாலான ஒத்தாசை செய்வதுதான் என் முதற் கடமை என்று நினைத்தேன். கணவரை மகிழ்விப்பதுதான் என் பிறவிப்பயன் என்று நினைத்தேன்.

‘அவர்கள் நம்மை லட்சியம் செய்யா விட்டாலும் நம் கடமையை நாம் செய்து விடவேண்டும்’ என்று ஏதோ பிரமாதமாக செய்யப் போவதுபோல் கற்பனை செய்து கொண்டேன். நான் அவர்களுக்காக உருப்படியாக என்ன ஒத்தாசை செய்தேன்?

பத்மா அதிருஷ்டசாலி. அதனால்தான் அவள் எல்லோராலும் நேசிக்கப் பட்டாள். ஆனால் அவளோ, யாரையும் லட்சியம் பண்ணவில்லை, எல்லோராலும் நேசிக்கப் பட்டதால் உள்ள நிறைவுடனிருந்தாள். அந்த உள்ள நிறைவு அவள் வாழ்க்கையைச் சிறப்பித்தது.

வளைகாப்புக்குப் பிறந்தகம் போக வந்தாள். அதற்கு முன்னமேயே அம்மாவால் நான் அங்கு தருவிக்கப்பட்டு விட்டேன். அவள் பெருமை கொண்டாடி விட்டுத் திரும்பிப் போனபின்தான் நான் ஊர் திரும்ப உத்தரவு கிடைத்தது.

சரி; அதெல்லாம் எதற்கு? முக்கியமான அந்தச் சம்பவம்—என் வாழ்க்கையையே பாழ்படுத்திய அந்தச் சம்பவம் என் அசட்டுத்தனத்தினால் நடந்ததுதானே!

அந்தத் தடவை பிறந்தகம் செல்ல வேண்டுமென்று சொல்லிய பொழுது, அவர் கண்டிப்பாகத் தடுத்தார். நானும் அந்தத்தடவை ரொம்ப முரண்டு செய்தேன். என் பாசத்திற்கே மாறான செய்கைகளில் ஈடுபட்டேன். எல்லா விஷயத்திலும் ஒத்துழையாமையை அனுஷ்டித்தேன். என் விபரீதப் போக்கைக் கண்டு எவ்வளவு வருத்தமுற்றாரோ! எனினும் எனக்கு வெற்றி கிடைத்து விட்டது.

கடைசியில் என் தங்கையின் பிரசவத்திற்காக அம்மாவுக்கு உதவ நான் பிறந்தகம் போக அனுமதி தந்தார்.

**வ**ழக்கப்படி, போன சில நாட்களுக்கெல்லாம் என் மனம் என் அருமைவீட்டை நாடத் தொடங்கிவிட்டது. இனிய சின்னஞ்சிறு வீடு! அதில் எனக்கே உரிய ஆத்மா! என் அருமைப் பொருள்கள்! என் உள்ளம் சீக்கிரமே ஊர் திரும்பத் தவியாய்த் தவித்தது.



அந்தி வேளையில் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றும்போது, என் வீட்டு ரோஜா, கனகாம்பரச் செடிகளின் நினைவு வந்துவிடும். எந்த வேலையைச் செய்யும்போதும், அதை என் வீட்டில் செய்த நினைவு வந்து விட்டால், அந்த வேலை தாமதப்பட்டு விடும். ஒவ்வொரு தடவை வீட்டைக் கழுவி விடும்போதும், என் மனம் என் வீடு கிடக்கும் அலங்கோலத்தை எண்ணிப் பார்க்கும். சமையலறையை என் மனம் கற்பனை பண்ணியது. ஹோட்டல் கூடக் கிடையாதே அவ்வூரில்! “முதலாளி வரப்போகிறார். வேலை முதுகெலும்பை ஒடித்துவிடும். மூடப்பட்ட ஹோட்டல்களும் திறந்தபாடில்லை. அதிகப்படி வேலையுடன் வீட்டு வேலையையும் நான் எப்படிக் கவனித்துக் கொள்ள முடியும்?” என்று பரிதாபகரமாகவும் பின்பு கோபத்துடனும் அவர் வாதாடியது என் நினைவுக்கு வந்தது. என் பிடிவாத குணத்திற்காக என்னை நானே சபித்துக் கொண்டேன்.

என் மனதை ரொம்பவும் துன்புறுத்தியது இன்னொரு விஷயம். ஊரிலிருந்து வந்தபின் அவரிடமிருந்து ஒரு கடிதம்கூட வரவில்லை. பிரியும்போது அவர் மனநிலை எப்படி இருந்தாலும் பிரிந்தபின் அவர் மனதில் என்பால் அன்பைத் தவிர வேறொன்றும் இருக்காது. பிரிவாற்றாமை அந்தத் தங்கமான மனதை வருத்தும்போது என்னிடம் அவருக்குள்ள அன்பு பன்மடங்காகிவிடும்.

நான் பல தடவை எழுதியும் பதில் இல்லை. முன்பெல்லாம் நான் அவர் கடிதத்தை எதிர்பார்க்க வேண்டிய அவசியமே இராது. அவ்வளவு குறுகிய காலத்திற்குள் அவர் கடிதங்கள் அடுத்தடுத்து வந்துவிடும். என் கடிதங்கள்தான் அவருக்கு எதிர்

பார்த்தபடி கிடைக்காது. இப்போது நிலைமை நேர் விரோதமாகிவிடவே கோபம் பலமாகத்தான் இருக்கிறதென்று நிதானித்தேன். என் வக்கிர புத்தி பிறந்தகத்தாரிடமும் துவேஷம் கொள்ளச் செய்தது. என் மனம் அடைந்திருந்த ஏக்கத்தில் யார் என்ன செய்தாலும் குற்றமாகவே பட்டது. என் சின்னத்தம்பி, "பெரிய அக்கா வந்தால்தான் மாசக் கணக்கிலே கம்மாத்திலே இருப்பா; சின்ன அக்கா மணிக் கணக்கிலேதான் இருப்பா" என்று பத்மாவைக் குறைத்துச் சொன்னது கூட என்னை ஏளனம் செய்வதுபோல் பட்டது. சில சமயங்களில், பெற்றோர் அறியாதபடி என் சிறிய சகோதர சகோதரிகளிடம் என் வெறுப்பைக் கடுஞ்சொற்கள் மூலம் வெளிப்படுத்தினேன்.

பட்சபாதம் என்றால் என்னவென்றே புரியாத இளம் பருவத்துக் குழந்தைகளிடம், "உங்களுக்குப் பத்மாதானே உசத்தி?" என்று சீறினேன்.

ஒருவாறாக என் தங்கையின் செல்லப் புதல்வன் அவதரித்தான். நான் ஊர் திரும்ப வேண்டிய நாளும் நிர்மாணிக்கப் பட்டது. அன்று என் மனம் ஒரு நிலையில் இல்லை. தாங்க முடியாத இன்பம், கரை காணாத துன்பம், ஏதோ விவரம் புரியாத பயம்! கடவுளே இது எதற்கு அறிகுறியோ!

வண்டியிலிருந்து நான் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தேன். உலகத்தை வெள்ளி மயமாக்கிக் கொண்டிருந்த பௌர்ணமிச் சந்திரன் என் மனத்தில் இன்ப நினைவுகளை எழுப்பிக் கொண்டிருந்தான். அப்போது தான் முதன் முதலாகப் புருஷன் வீடு செல்வது போலிருந்தது என் மனதிலே.

வீடு போய்ச் சேர்ந்தபோது நான் அடைந்த ஏமாற்றத்தில் ஸ்தம்பித்து நின்று விட்டேன். என்னை யார் வரவேற்றார்கள்? நான் எதிர்பார்த்தபடி என் கணவரா? திறந்த கதவுகளா?

இரண்டும் அல்ல. பூட்டப்பட்ட கதவு தான் என்னை வரவேற்றது.

அப்புறம் விவரம் தெரியத்தான் செய்தது. அவர் வேலை விஷயமாக எங்கோ 'காம்ப்' போயிருந்தார். இரண்டு மாதங்களுக்கு ஜோலியும் திரும்பவில்லை. என் மனம் அடித்துக் கொண்டது.

காலண்டரைப் பார்த்தேன். நான் ஊருக்குப் போன தேதியை அது காட்டிற்று. நான் அருமையாகப் பாதுகாத்த அவருடைய ஷூக்களும் செருப்புகளும் தாறுமாறாக இறைந்து கிடந்தன. மேஜை மீதிருந்த பூச்சட்டியில் நான் வைத்துவிட்டுப் போன பூங்கொத்து கருகித் தொங்கியது.

* * *

இயற்கை என் உணர்ச்சிகளைப் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அது தன் போக்கிலே சென்றது.

பவளமல்லிகை பூத்துக் குலுங்கியது. என் ரோஜா மலர்ந்து சொரிந்தது. என் வீடு பழைய களையை அடைந்துவிட்டது. துக்ககரமான இந்த ஒரு மாதம் போன விதமே தெரியவில்லை.

நாள்தோறும் அதிகாலையில் நான் சமையலறைக்குப் போகும்போது ஜன்னலடியே பார்ப்பேன். அந்த மரம் பூக்களுடன் குலுங்கிக் கொண்டிருக்கும். அதைப் பார்த்ததும் எனக்கு உற்சாகம் உண்டாகும். 'இன்றாவது அவரைப் பற்றிய சேதி தெரியும்!' என்று எண்ணிக் கொள்வேன். என் ஆனந்தம் கரை புரண்டு ஓடும். ஓடிப்போய்க் கண்ணாடி எதிரே நிற்பேன். "என் அழகு குன்றவில்லை; இளமை அழியவில்லை" என்று மமதை கொள்வேன். வாழ்வதற்கு நாட்கள் இன்னும் இருக்கின்றன என்று எண்ணி மகிழ்ச்சி கொள்வேன். "நீ இல்லாவிடில் வாழ்க்கை ஏது" என்ற பாட்டைப் பகல் முழுவதும் நான் பாடினாலும் எனக்குச் சலிப்பு ஏற்பட்டதில்லை.

பகல் பொழுது கழியும். மாலை வரும். உலகை இருள் கவ்வக் கவ்வ என் உள்ளத்தையும் அவநம்பிக்கை இருள் கவ்வும். அந்தி வேளையில் கூடுகளுக்குத் திரும்பும் பறவைகளின் கீச்சுக் குரல் என் இதயதாபத்தை எதிரொலிப்பது போல் தோன்றும். ஜன்னல் வழியே மரத்தைப் பார்ப்பேன். அது தன் அழகான மலர்களையெல்லாம் இழந்து தலை குனிந்து நிற்கும்.

என் வாழ்க்கையில் ஒளி உதயமாயிற்று. ஒரு நாள் காலையில் இளந்தென்றலை அனுபவித்துக் கொண்டு வாசலில் நின்றிருந்த போது அது உதித்தது. என் இடது பக்கத்தில் காலடிச் சத்தம் கேட்டது. இலை அசைந்தால் கூட அவர்தான் வருவதாக நினைத்துத் திரும்பிப் பார்க்கும் நான், காலடிச் சத்தம் கேட்டால் பார்க்கத் தவறுவேனா?

எதிரே அவரே நின்றிருந்தார்! என் பிராணபதி என் முன்னே நின்றிருந்தார்! "இதய ராணி" என்று பரவசத்துடன் பல

நடையை அமைத்த அவர் என் எதிரே நின்றிருந்தார்!

அவர் உடல் இளைத்துத் துரும்பாயிருந்தது. முகம் வாடிக் கறுத்திருந்தது.

“ராதா!” என்று இரைந்தார் அவர். “நீயா!” என்று ஆச்சரியப்பட்டார்.

* * *

அவர் வந்து விட்டார். என் வாழ்க்கையின் இருள் அகன்றுவிட்டது. ஆனால்...

சீக்கிரமே நான் ரகஸ்யத்தை அறிந்து கொண்டு விட்டேன். நிலவு பொழியும் இரவில் ஒரு நாள் பவளமல்லிகை மரத்தடியில் அவர் அந்தப் பயங்கர ரகஸ்யத்தை வெளியிட்டார்.

“ராதா, உன் பிரிவினால் ஏற்பட்ட துயரை ஆற்றிக் கொள்ளும் முயற்சியில் மிருகமாகி விட்டேன். நான் பழக்கத்திற்கு அடிமையாகி விட்டேன். என் இந்த நிலைக்கு நீதான் காரணம்” என்றார்.

அப்புறம்......

என் வாழ்க்கையில் பௌர்ணமியும் அமாவாசையும் மாறி மாறி வந்தன. அவர் வாரக் கணக்கில் வீட்டுக்கு வராமல் இருக்கும் போது எனக்கு அவர்மேல் ஆத்திரமாக வரும். ஆனால் அவர் ஒருநாள் வந்து இரண்டு பச்சாத்தாப மொழிகளைச் சொல்லி விட்டால் என் கோபமெல்லாம் மறைந்து விடும். என்னைப் பிரியாதிருக்கும்படி மன்றாடுவேன், கெஞ்சுவேன். அவரும் ஆறுதலளிப்பார். தம்முடைய நடத்தைக்கு அவர் மனதார வருத்தப்பட்டார்.

“ராதே, நான் மகா பாபி! உன்னை இப்படித் துன்புறுத்துகிறேனே!” என்று அவர் தலைமேல் கை வைத்துக் கொள்ளும் போது என்னால் தாங்க முடியாது.

“நான்தானே உங்களைக் கெடுத்துவிட்டேன்!” என்று விம்முவேன்.

அவர் லேசாகப் புன்னகை புரிவார். நாங்கள் கடைசியாகப் பிரிவதற்கு முன் ஆசையும் அருமையுமாக நடத்திய இன்பமான இல்லறத்தைப்பற்றி அலுப்பு சலிப்புத் தெரியாமல் பேசிக் கொண்டிருப்போம்.

“ராதா, நம் அன்னியோன்னிய வாழ்க்கையைக் கண்டு எவன் பொறாமைப் பட்டானோ அவன் இப்போது மனம் குளிரட்டும்” என்று ஆத்திரப்படுவார் அவர்.

அப்புறம், “நீ யுக யுகமாக வந்த என் துணை” என்று லேசாக அவர் பாடும்போது எங்கள் துயரெல்லாம் பறந்துவிடும்.

நாட்கள் செல்லச் செல்ல அவர் வீட்டிற்கு வருவதே நின்றுவிட்டது. என் வாழ்க்கை பாழானதை விட, அவர் உலகின் கண்களில் குற்றவாளியாகப் படுவதுதான் என்னை மிகவும் வருத்தியது.

என் வாழ்க்கை எங்கே பாழாயிற்று? அவர் முகம் எனக்கு மறக்கவில்லையே? அவரை நினைத்த போதெல்லாம் அந்த முகம் புன்னகையுடன் என் அகக் கண்ணெதிரே தோன்றிக் கொண்டிருந்ததே! “நீ யுக யுகமாக வந்த என் துணை” என்ற அவர் குரல் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறதே! ஆகவே உலகம் அவரைக் குற்றவாளியாக நினைத்ததை என்னால் சற்றும் பொறுக்க முடியவில்லை.

விதி என் வருத்தத்தைத் தவிர்த்து விட்டது. என் மாநிறமேனி வெளுக்க ஆரம்பித்தது. என் தொண்டையிலிருந்து வறட்டு இருமல் வர ஆரம்பித்தது. அப்புறம் நான் என் சின்னஞ்சிறு வீட்டிலிருந்து வெளியேற்றப்பட்டு இந்தப் பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு வரப்பட்டேன்.

இப்போது என் மனதில் ஒரு அமைதி ஏற்பட்டு விட்டது. இனிமேல் அவரை யாரும் குற்றவாளியாக மதிக்க மாட்டார்கள். வீட்டில் இளம் மனைவியைத் தனிமையில் விட்டு ஊர் சுற்றுபவராக அவரை உலகத்தார் தூற்ற மாட்டார்கள். மரணமே! உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?

* * *

நரசிம்மன் படித்து முடித்ததும் பெருமூச்சு விட்டான். உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருந்த துக்கம் மறுபடியும் அவன் தொண்டையை அடைத்தது. விசித்து விசித்து அழுதான். கண்களிலிருந்து கல கல என்று கண்ணீர் வந்தது!

அப்போது மாலை நேரம். அன்றையப் பாடத் தொந்தரவிலிருந்து விடுபட்ட உற்சாகத்தில் ஒரு சிறுவன் பாடிக் கொண்டு வந்த பாட்டு நரசிம்மன் கவனத்தைக் கவர்ந்தது.

எழுதிச் செல்லும் விதியின் கை
  எழுதி எழுதி மேற்செல்லும்
தொழுது கெஞ்சி நின்றாலும்
  சூழ்ச்சி பலவும் செய்தாலும்
வழுவிப் பின்னால் நீங்கியொரு
  வார்த்தை ஒன்றை மாற்றிடுமோ?
அழுத கண்ணீ ராறெல்லாம்
  அதிலோர் எழுத்தை அழித்திடுமோ?

## சுசீலா கிப்ஸ் உபயோகிக்கிறாள்
## அவள் அழகான பற்களைப் பெறுவாள்

1. சுசீலா தனது கிப்ஸ் டென்டிபிரிஸின் அழகான டப்பியையும், இனிய புதிய மணத்தையும் விரும்புகிறாள்.

2. அவள் பிரஷை தண்ணீரில் நனைத்து கிப்ஸ் டென்டிபிரிஸ் கட்டியில் தேய்க்கிறாள்.

3. அவள் எல்லா பற்களையும் தேய்க்கிறாள். (மேலும் கீழுமாக) உள்ளும் வெளியும் சுத்தம் செய்கிறாள்.

4. பிறகு தண்ணீரால் வாயை கொப்புளிக்கிறாள். இப்பொழுது கிப்ஸ் உபயோகிப்பதால் அது அழகான பற்களைப் பெற உதவும்.

## உங்கள் குழந்தைகளும் கிப்ஸ் உபயோகிக்கிறார்களா?

கரகரப்பான சுத்தம் செய்யும் வஸ்துக்கள், சாம்பல், கரி இவை போன்றவை, குழந்தைகளின் பற்களுக்கு ஊறுவிளைவிக்கலாம். உங்கள் குழந்தைகளை சிறுவயதிலிருந்தே கிப்ஸ் டென்டிபிரிஸ் உபயோகிக்கச்செய்யுங்கள். அவர்கள் பெரியவர்களானதும் வெண்மையான குற்றமற்ற பற்களைப்பெறுவார்கள். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் பற்களுக்கோ ஈறுகளுக்கோ ஒருபொழுதும் கெடுதல்செய்வதில்லை. குழந்தைகளும் பெரியவர்களைப் போலவே, கிப்ஸை விரும்புகிறார்கள். அதற்கு காரணம் கிப்ஸின் இனிய புதிய வாசனையும், தேர்ந்தெடுக்க 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகள் இருப்பதினாலும்தான்.

## கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது




GD. 24-172 TM



# 1½ அணா

# நோய், ஜலதோஷம்

## ஆகியவற்றை குணமாக்குகிறது



பிரதி தினமும் தொல்லை கொடுக்கும் ஜுரம், குளிர், நோய், நொடி ஆகியவற்றிலிருந்து உள்ளவர்களுக்கும் விடுதலை. கோடிக்கணக்கான மக்களுக்கு 'ஆஸ்ப்ரோ' என்பதின் அர்த்தம் இதுதான்— 'ஆஸ்ப்ரோ' உங்களுக்கும் உதவட்டும். அது உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்கட்டும். அது உங்களைப் பாதுகாக்கட்டும். உங்களுக்கு அருகாமையிலுள்ள மருந்து வியாபாரியிடம் நீங்கள் 'ஆஸ்ப்ரோ'வைப் பெறலாம். 8 மாத்திரைகள் 1½ அணாதான். அல்லது 30 மாத்திரைகள் கொண்ட பெரிய பாக்கெட் அணா 15. தலைவலி, நரம்பு வலி, ஜலதோஷம் ஏதாவது வந்தால் இரண்டு 'ஆஸ்ப்ரோ' மாத்திரைகள் சாப்பிடுங்கள். சிறிது நேரத்திற்குள் வலி குறைந்து போகும்; ஜலதோஷம் மறையும்; நீங்கள் மறுபடியும் சுகமாக இருப்பீர்கள். நீங்கள் கஷ்டப்பட வேண்டியதேயில்லை. ஏனெனில் 'ஆஸ்ப்ரோ' உங்களை கைவிடாது.

# 'ஆஸ்ப்ரோ'

## உங்களை கைவிடாது

'ஆஸ்ப்ரோ' அபாயமற்றது. குழந்தை கூட சாப்பிடலாம்.



கீழ்க்கண்ட நோய்களுக்கு உபயோகிக்கவும்:— தலைவலி, ஜலதோஷம், நரம்பு நோய், தொண்டைப்புண், வாதநோய், பல்வலி, தூக்கமின்மை, சூரிய வெப்பத்தால் ஏற்படும் கோளாறுகள்.

குடும்ப சைஸ்
30 மாத்திரை அணா 15




ஒவ்வொரு 'ஆஸ்ப்ரோ' மாத்திரையும் சுகாதார முறையில் காற்றுப் புகவிடாமல் அடைத்து சீல் வைக்கப்பட்டுள்ளது. இதனால் அது எப்போதும் சுத்தமாகவும் புத்தம் புதிதாகவும் வைக்கப்பட்டுள்ளது.



டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: [illegible] (இந்தியா) லிமிடெட், 9/10, [illegible] 1870 (போன்: 4400) [illegible]

விரைவில் குணம் • அபாயமின்மை • பலனளிக்கும் தன்மை.

114TM

# ஆவலுடன் விரும்பி நான் உட்கொள்ளும் ஆகாரம் உடம்புக்கு ஆபத்தை விளைவிக்கிறது



**ஆனால் தற்போது நான் விரும்புவதைச் சாப்பிட "பிஸ்மாக்" தான் காரணம்**

அமிலப் பெருக்கினால் அஜீரணம் வாயு, ஹிருதய நோய் இவை நிச்சயம் ஏற்படுமென நன்கு உணர்ந்திருந்தும் நாம் விரும்பும் ஆகார வகைகளை புறக்கணிப்பது அவ்வளவு எளிதல்ல. ஆதலால் இதர லட்சக் கணக்கானவர்கள் செய்வதை நீங்களும் பின்பற்றலாம். வீட்டில் எப்போதும் ஒரு பாட்டில் "பிஸ்மாக்" பவுடரையோ அல்லது உங்களது பையில் சில "பிஸ்மாக்" வில்லைகளையோ தயாராக வைத்திருங்கள். அஜீரணம் என்ற சந்தேகம் ஏற்பட்டவுடனேயே ஒரு சிறு அளவு "பிஸ்மாக்" உட்கொண்டு சீக்கிரத்திலும் சௌகரியமாகவும் குணம் அடையுங்கள். இன்றே ஒரு பாட்டில் "பிஸ்மாக்" வாங்குங்கள். அமிலப் பெருக்கினால் ஏற்படும் அஜீரணத்திற்கு இது ஒரு சிறந்த சஞ்சீவி.

"பிஸ்மாக்" ஒரு ஜியாப்ரே மானர்ஸ் ஏஜன்ஸி




# போனோமிண்ட்

## பேதி மிட்டாயிக்கு ஜே!

திவ்யமான பப்பர்மிண்ட் மிட்டாய் போல் சுவையுள்ளது. அதிலுள்ள மருந்து சத்துக்கள் உமிழ்நீரோடு கலந்து உதர கோசங்களில் சேர்கின்றன. இது மலபோக்கை செம்மையாக எளிதில் சரிப்படுத்துகிறது.

சென்னை மாகாணத்துக்கு விற்பனை ஏஜண்டுகள் :
மெஸர்ஸ். ஓரியண்டல் மர்க்கண்டைல் ஏஜன்ஸி
99-A, அரமனைக்காரத் தெரு :: மதராஸ்-1

WL 6

# ஆரோக்கியமும் சந்துஷ்டியுமுள்ள குழந்தைகளுக்கு

**அவர்கள் செலவழித்த சக்தியைத் திரும்பப் பெற அதிகப்படி உணவு அவசியம்.**



குழந்தைகளின் விளையாட்டிலும், படிப்பு வேலையிலும் துரிதமாக ஜீவசக்தி விரயமாகி விடுவதால், குவிந்திருந்த ஓவல்டின் இழந்த சக்தியை புதுப்பிக்க உதவும்

ஓவல்டின் இளம் குழந்தைகளுக்கும் சுலபமாக ஜீரணமாகும். விவேகமுள்ள தாய்மார் அவர்களது குடும்பத்தினருக்கு காலையிலும், இரவில் படுப்பதற்கு முன்பும் ஓவல்டினைக் கொடுக்கின்றனர்.

குழந்தைகள் "ஓவல்டின்" மணத்தை விரும்புகின்றனர். அதில் பழுத்த பார்லி மால்டிலிருக்கும் புஷ்டி, ஜீவ சக்தியளிக்கும் குணங்களும், சுத்தமான ஏட்டுப்பால், விசேஷமாகத் தயாரித்த கோக்கோ, மதிப்பு வாய்ந்த இயற்கை பாஸ்படைட்கள், விடமின்கள் முதலியவை நிறைந்த அளவில் அடங்கியுள்ளன.

இளம் உடல் வளரவும், எதிர்கால ஆரோக்யத்தை உறுதிப்படுத்தவும் உங்கள் குழந்தைகளுக்கு "ஓவல்டின்" கொடுங்கள். இப்பெயர் கொண்டது இது ஒன்றுதான்.




# 'OVALTINE'

## ஓவல்டின்

உலகில் மிகப் பிரசித்தி பெற்ற உணவு பானம்.

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.

OV. 302.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# கல்கி



KALKI ஜூன் 25, 1950 4 அணா

# டி. எஸ். ஆர்.

சந்தனாதித் தைலம்





அரைக்கீரை விதை தைலம்

டி. எஸ். ஆர். தைலங்களை ஆயிரக்கணக்கான மக்கள் விரும்பி உபயோகிப்பதற்குக் காரணம் அவைகளின் சிறந்தகுணமே. ஆயுர்வேத சாஸ்திரிய முறைப்படி தயாரித்த சந்தனாதித் தைலம், அரைக்கீரை விதைத் தைலம் மூளைக்குக் குளிர்ச்சியையும் சருமத்திற்குப் பளபளப்பையும் கொடுக்கின்றன.



**டி. எஸ். ஆர் & கோ.**
கும்பகோணம்

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:
சுராஜ் ஏஜன்ஸீஸ்
வைபிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை
கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்:
R. பாலபட்டாபி செட்டியார்
346, வைசியாள் தெரு, கோயமுத்தூர்
வட ஆற்காடு ஜில்லாவுக்கு:
சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)



எல்லாவிதமான
பாங்க் அலுவல்களும்
நடத்தப்படும்.

# தி யுனைடெட் கமர்ஷியல் பாங்க் லிமிடெட்

வழங்கி வைக்கப் பட்ட மூலதனம்
ரூ. 4 கோடிகள்.
செலுத்தப்பட்ட மூலதனம்
ரூ. 2 கோடிகள்
ரிசர்வ் நிதி
ரூ. 52½ லக்ஷங்கள்.

தலைமை ஆபீஸ்
கல்கத்தா.

G. D. பிர்லா
சேர்மன்.

B. T. தாகூர்
ஜெனரல் மானேஜர்.

# பாமோலிவ் சோப்பினுல்

## 3 பெண்களில் 2 பேர் 14 நாட்களில் அழகுள்ள சருமத்தை அடையலாமென்பதை பரிசோதனைகள் நிரூபிக்கின்றன!




பாமோலிவ் அழகு உபாயத்தை 1,285 ஸ்திரீகள் பரீக்ஷித்துப் பார்த்தனர். பதினாலே தினங்களில் மூவரில் இருவர் விதம் அழகான சருமத்தை யடைவதில் வெற்றி யடைந்தார்கள்.

நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இது தான்: முகத்தைப் பாமோலிவ் சோப்பினுல் கழுவுங்கள். குபுகுபு வென்று வரும் அதன் க்ரீம் போன்ற நுரையை 60 விநாடிகள் விடாது சருமத்தின்மேல் தடவிக் கொடுத்து மறுபடியும் முகத்தைக் கழுவுங்கள். தினம் 3 தடவை இம் மாதிரி 14 தினங்களுக்குச் செய்தால் உங்கள் சருமம் ஒரு புது சோபையுடன் பிரகாசிக்கும்.

**பாமோலிவ்வின் புதிய அழகு சிகிச்சையை இன்றே ஆரம்பியுங்கள்!**

---



## இந்த அபூர்வமான

# PEPS

### இரவில் இருமல், தொண்டைக்கட்டு, மார்பு சுவாசப்பை உபத்திரவங்களைப் போக்குகிறது

பெப்ஸ் வில்லைகள் வாயில் கரையும்போது அதிலுள்ள மருந்து சத்துக்கள் சுவாஸ மார்க்கத்திலும் சுவாஸப் பைக்குள்ளும் செல்லுகின்றன. பெப்ஸ் அபாயகரமான இருமிகளை அழித்து, தொண்டைக்கு ஹிதமளித்து, தொண்டைக் கட்டை முறித்து, வேக்காட்டை ஆற்றுகிறது. பெப்ஸ் சாப்பிடுவதற்கு இனிமையாக இருக்கும்.



**PEPS**

**மார்பு, சுவாஸப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத இருமி நாசன மாத்திரைகள்**